# Ūḻiyaṉ

## Malar 17, itaḻ 19

## November 12, 1937

Record no. 148

THE OOLIAN

REG. NO. M. 1509.

# ஊழியன்

மலர் 17
இதழ் 19

(தேசிய சித்திர வாரப் பத்திரிகை.)

விலை அணா 2
மலாய் காசு 15

பக்த அருணகிரி




—ஸ்ரீமதி ஏ. சுந்தரி.

12—11—1937

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கள. சென்னை, ஈசுவர௵ ஐப்பசி௴ 27௳ வெள்ளி (12-11-1937) இதழ் கக

இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
  தனமேறி ஈடிலாது
சொந்தவர சேபுரியத் துயர்போக்கி
  யாவருமே சுகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்
  இழிவுயர்வென் இயற்கை ஓங்க
நந்தலிலா ஊழியமே நான்கொண்
  நல்லனவெந் நாளும் வாழ்க[டேன்

## ஹிந்தியும் தமிழும்

ஹிந்தி மொழியை இம்மாகாண முழுமைக்கும் கட்டாயப் பாடமாகச் சில வகுப்புகளுக்கு ஏற்பாடு செய்யச் சென்னை அரசாங்கம் நினைத்தது. இக்கருத்து வெளிப் போந்ததுமுதல் சில தமிழ்ப் பண்டிதர்கள் ஹிந்தியெதிர்ப்புக் கிளர்ச்சி யொன்றைத் தொடங்கி யிருக்கின்றனர். ஹிந்தியைக் கட்டாயப் பாடமாக்கினால் தமிழ் கெட்டுவிடும் என்பது இக்கிளர்ச்சிக்காரர் கட்சி.

நிதானமும் நடுநிலைமையும் கொண்ட எவரும் இக்கூற்றில் உண்மை யிருப்பதாக ஒப்புக்கொள்ளமாட்டார். பல வருஷப் படிப்பில், இடையில் மூன்று வருஷங்கள் ஒரு மொழியைக் கட்டாயம் படித்துத் தீரவேண்டுமென்பதால் பல வருஷங்கள் படிப்பிக்கப்படும் தாய்மொழி அழிந்துவிடுவது எப்படி? ஸ்கூல்பைனல் வரைப் படிப்பதற்குச் சுமார் பத்து வருஷங்கள் ஆகலாம். பத்து வருஷங்களும் கட்டாயமாகப் படிக்கும் தாய்மொழி, இடையில் மூன்று ஆண்டுகள் கற்கும் ஒரு மொழியினால் அழிக்கப்பட்டுவிடும் என்பதை எவர் சொன்னபோதிலும் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்?

இந்தப் பரந்த நாட்டில் வாழும் முப்பத்தைந்து கோடி மக்களும் ஒருங்கு கலந்து உறவாடுதற்கு ஒருமொழி தேசப் பொதுமொழியாக இருக்கவேண்டும் என்பதைத் தேசாபிமானம் உள்ள யாரே மறுக்க வல்லார்? தென் கோடியிலுள்ள தமிழரும் வடக்குப் பகுதியிலுள்ள தங்கள் நாட்டுச் சகோதரர்களும் பேசி மகிழ ஒரு தேச பாஷை வேண்டாமா? அதற்கு ஒருமொழி இருந்தே தீரவேண்டும். எம்மொழி பொருத்தமுடையது என்பது ஆராயத்தக்கது. தேசத்தின் இணையற்ற ஸ்தாபனமான காங்கிரஸ் நன்கு ஆராய்ந்து நாட்டின் பொதுமொழியாக இருக்கவல்லது ஹிந்தி யென்று முடிவு செய்தது.

ஹிந்தி பொதுமொழியாக இருக்கவேண்டும் என்பதை ஒரேயொரு காரணங்கொண்டே நாம் ஒப்புக்கொள்கிறோம். அது எல்லாராலும் உடன்பட வேண்டுவதும் சிறந்ததுமான காரணமாகும். இதுவரை நாட்டுக்குக் கட்டாயப் பொதுமொழியாக ஒன்று இல்லை. பிறர் ஆட்சியில் கிடந்து தவிக்கும் இப்பெரிய நாட்டின் இணைப்புக்குப் பொதுமொழியொன்று இன்றியமையாதது என்று காங்கிரஸ்—அல்லது தேசம் கருதுகிறது. இந்நிலையில் எம்மொழியைப் பொதுமொழியாக்குவது? வேறு எதையும் கவனிக்க வேண்டுவதில்லை. இம்மொழி இதனால் சிறந்தது; அம்மொழி அதனால் உயர்ந்தது என்ற ஆராய்ச்சிப் போரில் இறங்க வேண்டுவதில்லை. நாட்டில் இன்று பெரும் பகுதியார் பேசும் மொழியெது என்று பார்த்தல் ஒன்றே போதியது. அவ்வகையில் ஹிந்தியைத் தவிர வேறு எம்மொழி பொதுமொழியாக முடியும்? முப்பத்தைந்து கோடி மக்களில் சுமார் இருபத்து நான்கு கோடி மக்கள் இன்று ஹிந்தியைப் புரிந்துகொள்ளக்கூடிய நிலைமையிலிருக்கின்றார் என்றால் அதைத் தவிரப் பொதுமொழிக்கு வேறு

பாஷையைப்பற்றிப் பேச என்ன இருக்கிறது?

தேச முழுமைக்கும் தமிழ் மொழியைக் கட்டாயப் பொது மொழியாக்கக் கூடுமானல் அதில் நம்மைவிடப் பெருமகிழ்ச்சியடையத் தக்கவர் யாருமிருக்க மாட்டார் என்று உறுதியாகக் கூறுவோம். அது இயலுவதா என்பதே கேள்வி. இருபத்து நான்கு கோடி மக்கள் அறிந்த மொழியைவிட்டு இரண்டு கோடி மக்கள் பேசும்தமிழைப் பொது மொழியாக்குங்கள் என்று சொல்லத்தான் துணிவது எப்படி?

தமிழுக்கு இருக்கும் தொன்மை—சிறப்பு—அழகு—இனிமையாகியவற்றில் எதுவுமே நிச்சயமாக ஹிந்திக்கு இல்லாமலிருக்கலாம். இலக்கிய — இலக்கண உலகில் தமிழை அணுகச் சிறிதும் ஹிந்தி தகுதியற்றதாக இருக்கலாம். என்ருலும் இரண்டு கோடி பேர்களே அறிந்த தமிழ், பொதுமொழியாக இருக்க முடியாது. தமிழ் அறிந்தாரைப் போலப் பன்னிரண்டு மடங்கு பேரால் அறியப்பட்ட ஹிந்தியே பொதுமொழியாக இருக்க முடியும்.

பொது மொழியொன்று வேண்டுமென்ருல் அது ஹிந்தியாகவே இருக்கவேண்டும். பொதுமொழி வேண்டாம் என்று அரசியல் அறிவும் தேசபக்தியும் கொண்ட எவரும் கூறத்துணியார். ‘பொதுமொழியைக் கட்டாயமாக்க வேண்டாம்; அதனை விருப்பப் பாடமாக விட்டுவிடலாம்’ என்று சிலர் கூறுகிருர். இது பொருத்தமற்றது. எதையும் கட்டாயமாக்கினுலன்றி மக்கள் எளிதில் கையாளப்போவதில்லை யென்பது அநுபவத்தில் காணும் உண்மை. பொது மொழி அவசியம் என்று ஏற்படுமானல் அதனைக் கட்டாயப் பாடமாக வைத்தே தீர வேண்டும்.

ஹிந்தியைப் பொதுமொழியாகக் கொள்வதால் தமிழைவிட அது உயர்ந்தது என்று ஆகிவிடும் என்று தமிழர் அஞ்ச வேண்டிய அவசியமில்லை. தமிழ் இலக்கியங்களின் உயர்வு தனிச் சிறப்பு வாய்ந்தது. ஹிந்தியைக் கட்டாயப் பாடமாக்குதல் தமிழுக்குக் கேடு பயப்பது என்பது ஆராய்ச்சிக்குப் பொருந்தாதது. “தமிழைக் கட்டாயப் பாடமாக்க வேண்டும்; எல்லாப் பாடங்களும் தமிழ் நாட்டில் தமிழ் மொழியிலேயே போதிக்கப்படல் வேண்டும்” என்று கிளர்ச்சி செய்தல் நியாயம். தமிழ்ப் பண்டிதர்கள் இத்துணைகாலமும் அவ்வழியில் முயலாதது பெருங் குறை. தேசப் பொது நலங் கருதி ஹிந்தியைக் கட்டாயப் பாடமாக்க முன்வந்த காங்கிரஸ் சென்னை யரசாங்கம், தாய்மொழி வளர்ச்சியின் இன்றியமையாமையை உணர்ந்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. கல்வி மந்திரி டாக்டர் சுப்பராயன் அவர்கள் சமீபத்தில் ஸ்ரீ வைகுண்டத்தில்,

> “நமது மாகாணத்தில் இது வரைத்தாய்மொழி கட்டாயப்பாடமாக இல்லாதிருப்பது வருந்தத்தக்கது. ஆருவது பாரம்வரைத் தமிழைக் கட்டாயப் பாடமாக வைத்து அரசாங்கத்தார் விரைவில் உத்தரவு பிறப்பிக்கப் போகிருர்கள். காங்கிரஸ் அரசாங்கத்தால் தமிழுக்கு ஏற்றமேயன்றி ஆபத்தில்லை. தாய் மொழியிலேயே பாடங்களைக் கற்பிக்கவும் ஏற்பாடு செய்யப்போகிருேம்.”

என்று பேசியிருப்பது மகிழ்ச்சிக்குரியது. பொதுவாகத் தேசப் பொதுமொழியும் சிறப்பாகத் தாய்மொழிகளும் கட்டாயப் பாடமாக்கப்பட்டு வளர்ச்சியுறச் செய்யச் சென்னை யரசாங்கம் தாமதமின்றி முந்துமாக!

---




## மாக்டனல்டு காலமானர்

இங்கிலாந்தின் மாஜி பிரதம மந்திரி ராம்ஸே மாக்டனல்டு உடல்நலம் பெறத் தென்னமெரிக்காவுக்குச் சென்று கொண்டிருக்கும்போது கப்பலில் மார்படைப்பால் மரணமடைந்தார்.

---

## கொன்னக்கோல் பக்கிரியாப் பிள்ளை காலஞ் சென்ருர்

நவ 2-ந் தேதியன்று மன்னர்குடி பிரபல வித்வான் கொன்னக்கோல் பக்கிரியா பிள்ளை தமது 70-வது வயதில் காலமானர். வாயினலேயே தாளக்கட்டுடன் மிருதங்கம் வாசிக்கும் போாற்றல் வாய்ந்தவர். காஞ்சிபுரம் நயினப் பிள்ளை, புதுக்கோட்டை தட்சிணமூர்த்திப் பிள்ளை ஆகியோருடன் இருவரும் தமிழ் நாட்டைவிட்டு மறைந்தார். இவர் மரணம் தமிழ்நட்டுச் சங்கீத உலகிற்கே ஓர் பெரிய நஷ்டமாகும்.



# அரசியல் உலகம்

“கமால்”

### பிஜ்னுரில் வெற்றி நமதே!

பிஜ்னுரில் வகுப்பு வாதத்துக்கும் தேசீயத்துக்கும் பெரிய போராட்டம் நடைபெற்றுக்கொண்டிருந்தது. ஐக்கிய மாகாண ஜனப்பிரதிநிதி சபையின் காங்கிரஸ் மந்திரி ஜனப் ஹபிஸ் முகமது இப்ராஹீம் தாம் வகித்து வந்த பதவியை ராஜிமைா செய்ததால் பிஜ்னுர்—நஜிபாபாத்—கிராமத் தொகுதியில் உபதேர்தல் நடைபெற வேண்டியதாயிற்று. கனம் முகமது இப்ராஹீம் காங்கிரஸின் சார்பில் நின்று 7271 வாக்குகள் பெற்று வெற்றியடைந்தார். லீக் அபேக்ஷகருக்கு 2102 வாக்குகளே பதிவாயின. இவ்வெற்றி இந்தியாவுக்கே ஒரு முக்கிய விஷயம் என சுபாஷ் பாபு கூறுகிருர்.

பஞ்ஜாபில் தேசீயம் வெற்றி கொண்டதன் பயனக பல பிற்போக்கான கட்சிகள் காங்கிரஸுடன் சேர்ந்துவிடுமென்றே தோன்றுகிறது.

### வங்காளத்திலுங் கூட

காங்கிரஸிலிருந்து விலகியிருந்த முஸ்லீம் கோஷ்டியினர் சமீபத்தில் காங்கிரசை அணைந்து கொள்வார்களெனத் தோன்றுகிறது. பாபு சுபாஷ் சந்திரர் கூறுவதேபோல் காங்கிரஸ் தயாரித்துள்ள பொருளாதாரத் திட்டம் சமூகப் பிணக்குகளை அகற்றி உணவுச் சுதந்திரத்தை நிலைநாட்டும் நோக்கத்துடன் அனைவரையும் ஒன்றுபடுத்திவிடும் என்பதிற் சந்தேகமில்லை.

### 25 லக்ஷம் அங்கத்தினர்

எல்லா மாகாணங்களிலிருந்தும் காங்கிரஸில் சேர்ந்திருக்கும் அங்கத்தினர் தொகை 25 முதல் 30 லட்சம் வரையிலுமிருக்கலாம் என்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்திலிருந்து கிடைத்த தகவலிலிருந்து தெரிகிறது. இந்திய தேச சரித்திரத்தில் என்றுங்காணுத தொகையாகும் இஃது. இதில் ஐக்கிய மாகாணம் முதன்மைபெற்று விளங்குகின்றது. இங்கு சுமார் 9 லட்சம் மக்கள் காங்கிரஸ் அங்கத்தினர்கள்!

### மகாத்மா-கவர்னர் சம்பாஷணை

நவம்பர் 9-ந் தேதி காந்திஜீ பிற்பகல் 1-25 மணிக்கு ஜி. டி. பிர்லா அனுப்பிய காரில் காரக்பூர் சென்ருர். அவருடன் டாக்டர் சுனில் போசும் மகாதேவ தேசாயும் சென்ருர்கள். சர்க்கார் பொக்கிஷ மந்திரியே காந்திஜீயின் காருக்கு முன்னல் சென்று கொண்டிருந்தார். சுபாஷ் சந்திரர் காந்திஜிக்குத் தொந்திரவு உண்டாகாமலிருக்கக் காரை மெல்ல ஓட்டும்படிச் செல்லிக்கொண்டே வந்தார். 2.30 மணிக்கு கவர்னரின் காரியதரிசியும் அவர் மெய்காப்பாளரும் மகாத்மாவை கவர்னர் சார்பில் வரவேற்றுக் குறிப்பிட்ட இடத்திற்கு அவரை இட்டுச்சென்ருர்கள். வங்க கவர்னரின் அரசாங்க மாளிகையைச் சார்ந்த ஒரு ஆலமரத்தினடியில் அமைக்கப்பட்டிருந்த மேடைமீது காந்திஜீயும் வங்க கவர்னரும் பேசிக்கொண்டிருந்தனர். பேச்சு சுமார் இரண்டு மணி நேரம் நடைபெற்றது. நாடனைத்தும் வழிப்பார்த்து கவனித்துக்கொண்டிருக்கும் பந்தோபஸ்துக் கைதிகளின் பிரச்னை பற்றியதாகவேயிருந்தது சம்பாஷணை.

காந்திஜீ வற்புறுத்தியதனுலேயே சம்பாஷணை கோரக்பூரில் நிகழ்ந்தது. மகாத்மா இருக்குமிடத்திற்கே தாம் வருவதாய்க் கவர்னர் கூறியும் அவர் இசையவில்லை. காந்திஜீயின் உடல் நலம் கருதியே மரத்தடியிலுள்ள ஓர் தனியிடத்தில் பேச்சு நடைபெற்றது. அவ்விடத்திற்குச் சமீபத்தில் கங்கை ஒழுகிக்கொண்டிருந்தது. உரையாடலின்போது ஒருவருமே அவர்கள் பக்கத்தில் செல்லவில்லை.

### “நம்பிக்கையிருக்கிறது”

கவர்னர் பேட்டிக்குப் பின்னர் சரத்சந்திரர் இல்லத்தை வந்தடைந்ததும் நிருபர்கள் காந்திஜீயைச் சந்தித்தனர். பந்தோபஸ்துக் கைதிகளின் சார்பாகவே பேச்சு நிகழ்ந்ததென்றும் நம்பிக்கைக்கு இடமிருக்கிறதெனவும் மகாத்மா நகைத்துக்கொண்டே விடைபகர்ந்தார்.

நம்பிக்கைக்கு இடம் உண்டென்ருல் எப்படி என்று அவர்கள் கேட்டார்கள். மீண்டும் காந்திஜீ நகைத்துக்கொண்டே வேருெரு நிருபரை நோக்கி, “நம்பிக்கை உண்டென்ருல் பொருள்என்ன?” என்று கேட்கவும் எல்லோரும் நகைத்தனர்.

மீண்டும் காந்திஜீ கவர்னரை சந்திக்க மாட்டார். உத்தியோகத் தோரணையில் அறிக்கையொன்றும் வெளிவராது. பேச்சுக்குப் பின்னரும் காந்திஜீயின் உடல் நிலை நன்ருகவே யிருந்தது என்று டாக்டர் பி. ஸி. ராய் அபிப்பிராயப்பட்டார்.

### மாஜி மேயர் ஸ்ரீராமுலு

சென்னைக் கார்ப்பொரேஷனின் முதலாவது காங்கிரஸ் மேயர் இவரேயாவார். இவரது சத்தியசீலமும், சுதந்திர உணர்ச்சியும், தளரா உழைப்பும், கடமை பிறழா நேர்மையும் நகர மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தன. மேயர் பதவிக்குரிய கௌரவத்திற்கு எள்ளளவும் இழுக்கு நேரிடா முறையில் திரு. ஸ்ரீராமுலு தமது நிர்வாகத்தை நடத்தி வந்தார். மிகப் பெரும்பான்மையான கட்டங்களில் தன்மை வகித்து அளித்த

(கடைசிப் பக்கம் பார்க்க)

சிறு கதை

# மறைந்து போன மணமகன்

பி. ஆர். லால்

1

திருச்சி கோவிந்தராஜ முதலியாரின் மூத்த புதல்வனது திருமணமல்லவா? சாமான்யமாகவாயிருக்கும்? ஆஹா! என்ன அழகு! என்ன அலங்காரம்!! என்ன ஆடம்பரம்!!! உற்றார் உறவினர் வண்டிகளிலும் மோட்டார்களிலும் வந்திறங்கியவண்ணமாகவேயிருந்தனர். கடலைப் போன்று எழுந்த அவர்களது பேராரவாரம் வானதிர எழுந்த மங்கள வாத்தியங்களின் முழக்கத்தையும் அழித்திற்று. "மரம் பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி அழைப்பவர் இங்கு எவரேனும் உண்டோ?" இல்லை. ஆதலால் அழைப்பில்லாமலுங்கூடச் சிலர் பாந்தத்துவம் பாராட்டிக்கொண்டே அங்கு வந்து குழுமினர்.

கனம் முதலியார் பணத்தைத் தண்ணீர்போல் வாரி இறைத்தார்: பால்வண்ணனது முதலாவது பிறந்த நாள் கொண்டாட்டத்திற்கே மூன்று நாட்கள் விருந்துக் கச்சேரிகள் நடாத்திய முதலியார் விவாகம் என்றால் சும்மா விட்டுவிடுவாரா? தமது குடும்பச் சார்பாக யாது வைபவம் நடைபெற்றாலும் அஃது தன்னூரில் வேறெவராலும் செய்யப்படாத அளவு சிறப்பாய் நிகழவேண்டு மென்பதே அவரது சித்தாந்தம். அத்துடன் முகமன் சொல்வோர் கூற்றுக்கு எளிதில் இரையாகிவிடும் குணமுடையோராயுமிருந்தார்.

இத்திருமண வைபவத்திற்கு வந்தோரனைவரும் இன்புற்றனர். ஆனால் மணமகன் முகத்தில் மட்டிலும் ஏதோ ஒருவிதச் சோர்வு புலனாயது. இக்கல்யாணத்தின் காரணமாய் குறைபாடுகளடைந்த கூட்டத்தினர் இருவகையினர். ஒருவகையினர், இரவும் பகலும் ஓயாது மடப்பள்ளியில் அனல் காய்ந்து கொண்டிருந்த சமையற்காரர்கள், இரண்டாவது வகுப்பினர், "பொழுது புலர்ந்தால் கால் வயிற்றுக் கஞ்சிக்கேனும் எங்கேயாவது வழியுண்டோ எனவும், இரவு அணுகிவிட்டால் படுத்துறங்க இடம் எங்கு அகப்படுமோ எனவும் ஏங்கித் திரியும் ஆயிரக்கணக்கான பிச்சை உணவிற்குக் கூவி இரப்போர். பெரியவீட்டுக் கல்யாணத்தை வெகு நாட்களாகவே எதிர்பார்த்திருந்த இவ் ஏழைமக்கள் பரிதாபமாய் ஏமாற்றமடைந்தார்கள். கலியாணக்காரர்களோ எனில் யாது குறை நேரிட்டாலும் பொறுத்துக் கொள்வார்கள். ஆனால் வந்தோர்க்குப் போதுமான உபசாரம் அளிக்கவில்லை என்ற வசைச்சொல் ஊரிற் கிளம்பிவருமாகில் அதனை ஒருபோதும் பொறுத்திருக்க மாட்டார்கள்.

ஆதல்பற்றி ஏழை எளியவரினும் ஊரார் நல்லெண்ணத்தையே பெரிதும் கவனித்து வந்தார் கனம் முதலியார். ஆகவே கலியாண வீட்டை முற்றுகை இடுவதைப்போல் நாலாப்புறங்களிலும் கூட்டமிட்டுக் கதறி அல்லல் விளைவித்த இரவலர்களை விசேஷ சேவகர்களின் துணைக்கொண்டே துரத்த வேண்டியதாயிற்று; அது கிடக்க.

2.

கலியாண வைபவத்தால் அதிக இன்புற வேண்டியவன் மணமகனன்றோ? ஆம் அதற்கென்ன சந்தேகம்! ஆனால் தன் தந்தையின் செல்வப் பெருக்கும், தனக்கு வாழ்க்கைத் துணைநலம் ஈந்த தாய் மாமனாகிய தியாகராஜ முதலியாரின் குபேர சம்பத்தும், நம் பால்வண்ணனது உயிருக்கு ஓர் ஆறுதலளிக்கவில்லை. இளமை தொட்டே வீண் ஆடம்பரகுணங்களை வெறுத்து வந்த இச்சிறிளங் குமரன் பரம்பரைக் குடும்பப் புகழை வெறுத்து வருபவனாயிருந்தான். திருச்சி கல்லூரியில் கல்வித் தேர்ச்சியடைந்து பட்டமும் பெற்றிருந்தான். நாட்டுப்பற்றும், பொதுநல ஆர்வமுமே அவனது அணிகலன்கள். காந்தி அடிகள் இவ்விவாகத்தின் இரண்டு மாதங்கட்கு முன்னர் திருச்சிக்கு விஜயஞ் செய்தார். அன்னவர்க்கு ஓர் நிதியளிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் அப்போது பொருள் திரட்டப்பட்டது. அதன் பொருட்டு நிர்மாணிக்கப்பெற்ற வரவேற்பு சபையின் தலைவரும் இன்னுஞ் சில பெரியார்களும் ஓர் நாள் கனம் முதலியாரிடம் நன்கொடை பெற்றுக் கொள்ள அவரது இல்லத்தை நாடி வந்துகொண்டிருந்தனர். அதைக்கேட்ட முதலியார் மனம் பதைபதைத்தது. பால்வண்ணன் அதுசமயம் வீட்டில் இல்லை. அவர்கள் முதலியார் தலைவாயிலில் காலடி எடுத்து வைத்தார்களோ என்னவோ. கனம் முதலியார் சரேலென்று எழுந்து, ஒளிந்து கொள்வதற்காக வீட்டிற்குள்ளே மடப்பள்ளி நோக்கி விரைந்து செல்லலானார்.

அந்தோ பாவம்! என்ன செய்வார்; வீட்டின் தளம் சிமிட்டியால் போடப்பட்டிருந்தது. குழந்தை கமலா அப்போதுதான் உரித்து எறிந்த வாழைப்பழத் தோல் அங்கே கிடந்தது. அவர் அதனை கவனிக்காமலே அதன் மீது அடி எடுத்து வைத்ததும் கால் வழுகித் தடாரெனக் கீழே விழுந்தார். பாவம், முழந்தாட்களில் பலமாய்க் காயம் பட்டதுடன் தலை, அருகிலிருந்த தூணின் மீதுபட்டு இரத்தம் பெருக்கெடுக்க ஆரம்பித்தது. வீட்டிற்குள்ளிருந்தோர் அல்லோல கல்லோலப்பட்டு விரைந்து ஓடினர். காந்தி சிதிதிரட்ட வந்தோர்கள் ஒன்றும் பேசுதற்கு இயலாமல், கனம் முதலியாரின் காயங்களைக்கட்ட உதவி செய்து விட்டு வேறிடம் நாடிச் சென்றனர்.

சற்று நேரத்திற்கெல்லாம் பால்வண்ணன் வீடு திரும்பியதும் தன் தந்தையை நோக்கி நடந்ததை விசாரித்தான்.

பால்வண்ணன்:—ஏன் அப்பா, கவனமாய் நடக்கலாகாதா? அவ்வளவு விரைவாக எங்கே ஓடினீர்கள்?

முதலியார்:—நான் ஓடவில்லையே; விரைவாக நடந்தேன்.

கமலா:—"இல்லை அண்ணு; அப்பா ஓடிணுங்கோ. வீட்டு வாசல்லே காந்திக்குல்லாய் போட்டுக்கொண்டு யார் எல்லாமோ நுழைந்து கொண்டிருந்தாங்கோ. அவர்களைக் கண்டு பயந்து, அப்பா, 'இல்லே சொல்லிடு, இல்லே சொல்லிடு' என்று அவசர அவசரமாய் முன்னுலிருந்த நம்ப கோபாலனைப் பார்த்து சொல்லிக்கொண்டே பின்னுலே ஓடிணுங்கோ; தொப்பென்று விழுந்தாங்கோ.

பால்:—காந்தி குல்லாயாமே! என்ன அப்பா நடந்த சமாசாரம்?

முதலியார்:—என்ன சொல்ல. வெட்கக்கேடு. ஊரையெல்லாம் கெடுத்துவரும் அந்த சண்டாளன் என் வீட்டிற்குள்ளும் நுழைந்துவிட்டான். அவன் பெயரைக்கேட்டதுமே இவ்வளவு தொல்லை என்றால், அவனது வரவால் நம்மூருக்கு எவ்வளவு தொல்லை விளையுமோ தெரியவில்லை? இப்போதே சிறு பயல்கள் பெரியார் சிறியார் என்ற வேறுபாடின்றி நடக்கின்றனர். மன்னர் அரசாங்கத்திற்கு எதிரிடையான ஒருவிதமான இயக்கத்திலும் கலந்துகொள்ளாதே அப்பா. உனது குலப்பெருமைக்கும், கௌரவத்துக்கும் இழிவைத்தரும் கூட்டத்தாருடன் சேராதே. இந்தத் துரதிருஷ்டமான சம்பவத்திலிருந்து எனக்குக் கிடைத்த படிப்பினையை நீயும் கற்றுக்கொள்.

(பால்வண்ணன் நகைகின்றான். தந்தையைப் பார்த்து)

பால்வண்ணன்:—அப்பா தாங்கள் சொல்வது சரியன்று. புண்ணியமான ஒரு செயல் புரியத் தங்களை நாடிவந்த தொண்டர்களைக் கண்டு தாங்கள் ஓடி ஒளிப்பானேன்? அச் செயலுக்காகத்தான் தாங்கள் தண்டிக்கப்பட்டீர்கள்.

என்று சொன்னதும் முதலியார் கோபமுண்டு கருநாகம் போல் சீறினர். தற்காலக் கல்லூரி வாசிப்பால் நாசமடைந்த இளைஞர்கட்கு தனது மகன் ஓர் உதாரணம் என்று சமயம் வாய்க்கும்போதெல்லாம் சொல்லி வந்தார். இதை முன்னிட்டு தந்தையின் மீது தநயனுக்கு மனக்கசப்பு அதிகரித்துக்கொண்டே வந்தது. பால் வண்ணனது தேசியப் பற்றும், அவன் தந்தையின் ஏகாதிபத்திய பக்தியும் அடிக்கடி ஒன்றோடொன்று முரண்பட்டுக்கொண்டேயிருந்தது.

இனி கதையைத் தொடர்வோம்.

3.

கலியாணத் தினத்தன்று இரவு சிறப்பான ஓர் ஊர்வலம் நடத்த ஏற்பாடாயிருந்தது. ஊர்வலத்திற்கென்று ஓர் புஷ்பரதம் பெரும் பொருட் செலவில் தருவிக்கப்பட்டிருந்தது. அவ் வைபவத்தைப் பார்ப்பதற்கென்றே ஊரிலுள்ள மக்கள் அனைவரும் கதிரவன் சாய்வதற்குள்ளாகவே தத்தம் அலுவல்களை முடித்துக்கொண்டு சித்தமாயிருந்தார்கள். புஷ்பரதத்துடன் தென்னிந்திய நாதஸ்வர வித்வான் ராஜரத்தினம் பிள்ளையின் மேளமும், பெயர்பெற்ற 'பாண்டு' வாத்திய கோஷ்டியும், தருவிக்கப்பட்டிருந்தன. ஊர்வலத்தின் மத்தியில் கலை மங்கையர் நாட்டியமும், கோலாட்டமும், நடத்துவதற்கு ஏற்பாடாயிருந்தது. அதிக ஜனநெருக்கடி உண்டாக விடாமல் கூட்டத்தை சிதறவைக்கும் பொருட்டு நடனமாடும் பொய்க் குதிரைகளும் 'ஆளி'களும், தருவிக்கப்பட்டிருந்தன. வாண வேடிக்கைக்காரர்களும் வந்திருந்தார்கள். சுருங்கச் சொல்லின் அன்றைய தினம் நடைபெறவேண்டிய கலியாண ஊர்வலத்தில் ஓர் தேவாலயத் திருவிழாவில் சுவாமி பவனி வருங்கால் அமைந்திருக்கும் சிறப்புகளெல்லாம் குறைவறப் பொலிந்திருந்தன.

புஷ்பரதத்தின் அழகினை வருணித்தல் அரிது. அதனை நிர்மாணித்தவர்கள் தமது கைத்திறன் அனைத்தையும் காட்டியிருந்தனர். அதில் அமைத்திருந்த சிங்கார ஆஸனத்தில் அமரவேண்டிய மணமகனும் மணமகளும் கோமகனும் கோமகளும்போல் உயரிய ஆடைகள் தரித்துக் கொண்டிருந்தனர். அலங்காரங்களும் முடிவுற்றன. மாப்பிள்ளையாகிய பால்வண்ணனும் அவன் தோழனும் கலியாண வீட்டின் இரண்டாவது மாடியிலிருந்து கீழே இறங்கிவர உத்தேசம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அச்சமயம் வீட்டின் வாயிலில் நிறுத்தப்பட்டிருந்த புஷ்பத்தேரை நோக்கி ஒருவன்—ஒரு வழிப்போக்கன்—ஓர் ஏழை கீழ்வருமாறு உரக்கப் பேசிக்கொண்டே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். "எல்லோரும் வீதிகள்தோறும் சுத்தம் செய்து, திருவிளக்கேற்றி தோரணங்கட்டி தூபதீபங் காட்டுங்கள். சுவாமி எழுந்தருளப் போகிறார்" என்று கூறிக்கொண்டே மேலும் சொன்னதாவது:—

"என்ன அக்கிரமம்! என்ன அட்டூழியம்!! இன்று அரசன் நாளை ஆண்டியாய் விடுகிறானே; அதை நினைத்தாவது மனிதன் கடவுளை பயந்து நடக்க வேண்டாமா?"

இதைக்கேட்ட வேறொருவன் "சரிதான் ஐயா, நீ சொல்வது. சோறு, சோறு என்று கதறிய ஏழைகளையெல்லாம் இன்று மாலையில் தடிகொண்டு விரட்டினர் ஐயா! என்ன செலவு செய்தும் என்ன பயன்" என்றான்.

"எதிரின்றவன் கையில் கல்லைக்காணோம். உலக இயல்பு அவ்வாறன்றோ இருக்கிறது. என்ன செய்வது என்றான்" இனி யொருவன்.

இவர்கள் பேச்சை உற்றுக்கேட்டுக் கொண்டிருந்த சமதர்மவாதி யொருவன் கொதிக்கும் உள்ளத்துடன், பணச்செருக்கெனும் பிணிதீர்க்கும் மருந்து பொதுவுடைமையே; அது வந்தால்தான் இவர்கள் கொட்டம் அடங்கும்!" என்று கழறினன். இதை அனைத்தையும் மாடியில் பலகணி யோரமாய் நின்று கொண்டிருந்த மாப்பிள்ளையாகிய பால்வண்ணன் உற்றுக்கேட்டுக் கொண்டேயிருந்தான். இத்தகைய பெரிய ஊர்வலம் நடத்த வேண்டாமென்று அவன் தன் தந்தையாரிடமும் மாமனிடமும் கலியாணத்திற்கு முன்பே கேட்டு வாக்குறுதி பெற்றிருந்தான். அவ் வாக்குறுதியைப் பெற்றபின்பே பால்வண்ணன் இவ் விவாகத்திற்கு இசைந்தான். என்றாலும் பெண்களின் வற்புறுத்தலும், 'அந்தஸ்து' என்று உலகினரால் பெரிதாய் மதிக்கப்படும் சிறுமைக் குணத்தின் வன்மையும் பால்வண்ணனின் விருப்பத்தை மதிக்கவில்லை. மனம் பெருங் குழப்பத்திற்காளாயிற்று. அவன் மனதிற்குடிகொண்டிருந்த பொதுநலப் பெரு நோக்கு மற்றெல்லா நினைவுகளையும் ஆட்கொண்டது. உடனே தோழனை அழைத்து, "கோபாலா இதோ என் ஆடைகளைக் கழற்று; ஐந்து நிமிடத்திற்குள் கால் கழுவி வந்து விடுகிறேன். வயிறு கலக்குகிறது" என்று சொல்லிக்கொண்டே மண ஆடைகளைக் கழற்றிக் கீழே வைத்தான். தன்னறைக்குட் புகுந்து பெட்டியைத் திறந்தான். கைக்கடியாரத்தை அதனுள் வைப்பதுபோல் பாசாங்கு செய்துவிட்டு ஏதோ ஒரு காகிதத் துண்டை தன் சட்டைப் பைக்குள் இட்டுக்கொண்டு கொல்லைப் புறமாக விரைந்து சென்றான். ஒருவரும் அவனை ஐயுறவில்லை.

இரவு மணி எட்டு. ஊர்வல ஆரம்பத்திற்குச் சமயமாகிவிட்டது. வாத்தியங்கள் ஒலிக்க ஆரம்பித்தன. ஊர்வலத்தைக் காண ஆயிரக் கணக்கில் மக்கள் கூடிவிட்டனர். சமார் கண்ணுக்கு எட்டக்கூடிய எல்லை வரையிலும் ஊர்வலம் நீண்டிருப்பதாய்த் தெரிந்தது. மணப் பெண்ணை ரதத்

தில் ஏற்றிவைப்பதற்கு மணமகனை விரைவில் அழைத்து வரும்படியாக முதலியார் கர்ஜித்தார். சிலர் மாடிமீது ஏறிப்பார்த்தார்கள். வேறு சிலர் கொல்லைப் புறத்திற்கு ஓடினார்கள். எங்கும் காண வில்லை. கலியாண வீட்டில் ஓர் பரபரப்பு ஏற்பட்டது. வேட்டுகள் அதிர ஆரம்பித்தன. ஜனத்திரளும் ஆவலாய் பூரதத்தையே நோக்கிக் கொண்டிருந்தது. மக்கள் காத்துக் காத்துச் சோர்ந்து போயினர். மணிபத்தாகியும் ரதத்தில் வீற்றிருக்க வேண்டியவர்களைக் காணவில்லை. கூட்டத்திலுள்ளவர்கள் பற்பல விதமான வதந்திகளைக் கிளப்பினர். வாத்திய கோஷம் அடங்கிற்று. வெகுதூரத் திற்கப்பா விருந்த நாட்டியக்குதிரை மட்டிலும் வெகுநேரத்திற்குப் பின்னர் தனது நர்த்தனத்தை நிறுத்தியது.

திசைகளெங்கும் வண்டிகளும் மோட்டார்களும் பறந்தன. முதலியார் மனமுடைந்தார். அரிவையர் திகிலடைந்தார்கள்.

6

மாப்பிள்ளையில்லாமல் ஊர்வலம் தடைபட்ட மூன்றும் நாள் கனம் கோவிந்தராஜ முதலியாருக்கு ஓர் நிருபம் கிடைத்தது. அஃது வீகானிலுள்ள (வார்தா) ஆசிரமத்தினின்று பின்வருமாறு எழுதப் பட்டிருந்தது:—

வார்தா
24—5—35

என் அன்புக்குரிய தந்தையே,

தங்கள் மனம் புண் படும்படியாக நடந்து கொண்டதற்கு வருந்துகிறேன். ஆனால் என் மனம் குதூகலிக்கின்றது. என்னை மன்னிப்பீராக.

ஹரிஜனநிதிக்கு ஒரு காசுகூட நல்காத, நல்கும் பேற்றிற்கு உரிமைபெறாத இருநிதி படைத்த தங்கள் மைந்தனாய் வாழ்நாட்களைத் தள்ளி வருவதற்கு நாணுகிறேன். இது ஓர் புறமிருக்க. விவாககாலத்திலும் ஊரார் நம் தன்மையை இகழும்படியாய்த் தாம் நடந்து கொண்டதை என்னால் பொறுத்துக் கொண்டிருக்க இயலாது போயிற்று. நம் இருவரது வாழ்க்கை நோக்கங்கள் ஒன்றிற்கொன்று முரண்பாடானவை.

ஆகவே தற்போது நான் தங்கிவரும் காந்தி ஆசிரமம் என் இருதயத்திற்குப் பூரணமான அமைதியும், ஆறுதலும், ஆனந்தமும் அளித்து வருகிறது. கூடுமெனின் துணைவி காந்திமதியையும் இவண் இட்டு வந்து என்னுடன் தேசப்பணியில் ஈடுபடச் செய்யலாமென்று உத்தேசம்.

பிழைபொறுக்க. வணக்கம்,
தங்கள் அன்பிற் சிறந்த
பால்வண்ணன்,





<u>தமிழ் நாடகம்</u>

# வாஸவதத்தா



By
S. K. SWAMI,
Sub-Editor, 'Tamilan'



ஹிந்தியில் மாற்றப்பட்டிருக்கும்
வாஸவதத்தா
என்ற நாடகத்தின் தமிழ் ஆக்கம்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

அங்கம் 2. காட்சி 2.

இடம்:—வாஸவதத்தாவினுடைய மாளிகை.

காலம்:—இரவு.

[பெரிய தனவந்தரான அழகண்ணன் செட்டியார் கோச்சுவண்டியிலிருந்து இறங்கி கமலாவிடம் விசாரிக்கிறார்.]

செட்டியார்:—வாஸவதத்தா என்று பேசிக்றாளே அந்த அம்மாவுடைய மாளிகை இதுதானே? எனக்கு அந்த அம்மாவோடு கொஞ்சம் பேசணும்.

கமலா:—மாளிகையையா கேக்கிறீங்க? அதோ அந்த கடைத்தெருவிலே போய் கேளுங்க செட்டியாரய்யா; ஏதேனும் வியாபார காரியமாக வந்தீங்களா?

செட்டியார்:—என்ன இப்படி பேச்றே; அந்த அம்மாவுடைய பங்களா இதோன்னென்று கேக்றேன்?

கமலா:—ஓகோ! அப்படியா! அம்மாவோடுதானா பேசணும். பணத்தைப்பற்றி உங்களிடம் சொல்லவேண்டியதில்லையே?

செட்டியார்:—அதிருக்கட்டும். பேசுவதற்கும் பீசு உண்டா? காசைக்குறித்து நம்மளுக்கு யோசனையில்லை. தெரிஞ்சுதா? (வண்டிக்காரனைப் பார்த்து) அடே! சூரியா, இந்தா (4 அணாக் காசைக் கொடுத்து) இந்தா வச்சுக்கோ. வண்டியிலேயே தூங்கு. தெரிஞ்சுதா. நான்வர நாழியாகும்டா. அடே இப்படிவா. இங்கே வந்தேன், போனேன் என்று ஆச்சியிடம் உளறிவிடாதே அது பிசாசு.

சூரியன்:—ஆமாம் சாமி, அவுங்க கரும் பிசாசு.

[செட்டியாரை வாஸவதத்தாவிடம் சேர்த்தபின் செட்டியார் 'திருதிரு' என்று விழிக்கிறார். கமலா

3

வண்டிக்காரனைப் பார்க்கவரும்போது இருவரும் முட்டிக்கொள்கிறார்கள்.]

கமலா:—அடே அப்பா, பூதமே. உனக்கு என்ன கண்ணில்லையா? பாவி! இப்படியுமா பொம்பிளையை இடிப்பது?

சூரியன்:—அடி அசடே மூடுவாயை. வேணுமின்னு இடிச்சேன். நான்தான் தெரியாம தவறி இடிச்சுட்டேன், நீ என்ன சல்றுப்போல சிப்பதா. நீ பொம்பிளையா ஆம்பிளையா?

கமலா:—அதிலே சந்தேகமா? போனது போகட்டும். ஆணைக்கும் அடி பிசகும்.

சூரியன்:—அப்படிச் சொல்லு. நல்ல பொம்பிளே.

கமலா:—வண்டியிலே வந்தாரே, அந்தத் தொப்பை வயிற்று செட்டியாரு யாரு அவரு?

சூரியன்:—அதெல்லாம் ரொம்ப ரகசியம். சொல்லக் கூடாது. அவுங்கதான் அ. ச. சி. அழகண்ணன் செட்டியாரு. என் பெயரு சூரியன்.

கமலா:—ரொம்பப் பொருத்தம். இருள் என்று பெயர் போடப்படவேண்டிய உனக்கு சூரியன் என்று போட்டார்களே!

(இருவரும் போகிறார்கள்.)

[செட்டியாரும் வாஸவதத்தாவும் பூங்காவனத்தின் ஓர்புறமாக வருகிறார்கள். சூரியனும் கமலாவும் வேறொரு பக்கமாக வருகிறார்கள்.........செட்டியார் பூங்காவனத்தின் ரமணீயத்தைப்பற்றித் தனது கர்ப்பத் தொனியில் பாடுகிறார்—தாஸி சிரிக்கிறாள். சூரியனும் கமலாவும் திடுக்கிடுகிறார்கள்.]

வாஸவதத்தா:—வெகு நன்றாயிருக்கிறது. உங்களுக்கு வெகு இனிமையான சாரீரம். சந்தேமோ அப்பா சொல்லவேண்டியதில்லை. இப்படிப்பட்ட சங்கீதத்தேனை உங்கள் இருதயத்துக்குள்ளே அடக்கி வைத்துக்கொண்டீர்கள்

கிறார்கள்? இம்மாதிரியான கர்த்தப சாரீரம் உங்களுக்கு கிடைத்ததே பூர்வஜன்ம பாக்கியம் தான். பகவானுடைய திருவிளையாடல்.

சேட்டியார்:—அன்பே, நீ சொல்லுவதுபோல கந்தர்வத் தொனி கிடைக்க நான் போன ஜன்மத்தில் பாக்கியம் செய்திருக்கத்தான் வேண்டும். எல்லோரும் இப்படியே சொல்லுகிறார்கள். என்னை என்ன சாமான்யமாகவா நினைத்து விட்டாய்?

வாஸவதத்தா:—தப்பாகவொன்றும் நினைக்கவில்லை. கர்த்தப சாரீரத்தைப் புகழவே செய்தேன். சங்கீத சிரோன்மணியான தாங்கள் தயவு செய்து எனக்கு இரண்டு மூன்று கீர்த்தனைகள் கற்றுத் தரவேண்டும்.

(செட்டியார் உடனேயே பாடுகிறார். தாஸி சிரிக்கிறாள். செட்டியாரின் விருபத்தைக் குறித்து தாஸி வேடிக்கையாக பாடுகிறாள். வாய் பிளக்கிறார் செட்டியார்.)

[செட்டியார் பரம சந்தோஷத்தோடு மாலையை போடுகிறார். தாஸியின் தேகம் தனது சரீரத்தில் பட்டவுடன் மின்சார சக்தி ஏற்றதுபோல உடலை வளைத்து வாயை பிளந்து முகத்தை நீட்டுவது வேடிக்கையா யிருக்கிறது.]

(இருவரும் பங்களாவுக்குள் செல்கிறார்கள்.)

### அங்கம் 2. காட்சி 4.

இடம்:—ஒரு சிறிய காடு.

காலம்:—மாலை.

[ஒரு வேடன் வில்லும் கையுமாக மானை ஓட்டிக் கொண்டே வருகிறான். மானை வதை செய்யப்போகும் வேளையில் உபகுப்த முனிவரின் பிரவேசம்.]

உபகுப்தன்:—(ஆத்திரமாக) அன்பா, வேண்டாம். அந்த சாது மிருகத்தை அநியாயமாகக் கொல்லாதே விட்டுவிடு. அந்த மான் உனக்கு என்ன துன்பம் விளைவித்தது?

வேடன்:—(கோபமாக) அடே பிச்சைக்காரா, என்னிடமா உபதேசிக்க வந்தாய்? இந்த காட்டிற்கு நான் ராஜா. என்னை விலக்குவதற்கு நீ யார்? நானே மஹாராஜா என் உத்தரவில்லாமல் இந்த காட்டிற்குள் நீ எப்படி வந்தாய்? தக்க சிக்ஷை தருவேன்.

உபகுப்தன்:—புத்தம் சரணம். மஹாராஜாவே! நமஸ்காரம் மன்னிக்கவேண்டும். ஜீவப் பிராணிகளை ஹிம்சிப்பது அதர்மமல்லவா? மேலும் இந்த சாது மிருகம் தங்கள் ராஜசமூகத்துக்கு என்ன பிழை செய்தது? ராஜதர்மத்திற்கு அடாத காரியமல்லவா இது?

வேடன்:—(கடகடவென்று சிரித்துவிட்டு) கருப்பா இங்குவா.

[என்று வேறொரு வேடனை அழைத்து இருவரும் உபகுப்தனை ஏற இறங்கப் பார்த்து மீண்டும் நகைக்கிறார்கள்.]

வந்தவன்:—ஹா............ஏ, சாமியாரே, எங்க ராஜாவை எதிர்த்துப் பேசாதே. உயிரிலே ஆசை இருக்குதா, ஓடிப்போ. நாங்க சத்தில்லாத காய், கிழங்கு, தழைகளை தின்னமாட்டோம். நல்ல பச்சை மாமிசந்தான் சாப்பிடுவோம். உனக்கென்ன தெரியும்? நீ சாமியாரு. பயித்தியம் பேசாது போய்விடு. ராஜாவுக்குக் கோபம் வந்திடிச்சா நீ செத்துப்போவே. போயிடு.

உபகுப்தன்:—அண்ணா! நம்முடைய உணவு வகைக்காக தாவரங்களிருக்கின்றன; வாயில்லாத பிராணிகளை வதைசெய்வது மகா கொடிய பாபம். சாக்ஷாத் சர்வேசுவரனின் குழந்தைகளாகிய ஜீவப்பிராணிகளைக் கொன்று புசிப்பது கருணைக்கடலாகிய பரமபிதாவுக்குச் செய்யும் மகா கொடுமையாகும். இந்த நிமிஷம் முதல் இவ்வித கொடிய வழக்கத்தை விட்டுவிடுங்கள்.

வேடன்:—ஏ சாது! மனுசரையும் படைத்து கோழி, ஆடு, மானு, மயிலு, மாடு, தேளு, பாம்பு முதலான ஜந்துக்களையும் ஏன் உண்டாக்கினார் கடவுள்? மனிதன் மிருகங்களைக் கொன்று தின்னவேண்டு மென்பது ஆண்டவனுக்கு ஆசை. எவ்வளவு காலமாக எங்க பாட்டன், முப்பாட்டன்களெல்லாம் முசல், கோழி, மான், இவைகளைக் கொண்ணு தின்னிருக்கிறார்கள் தெரியுமா? எங்க மாரியம்மன்கூட கேக்கிறாள்.

உபகுப்தன்:—(சாந்தமாக) அண்ணா, மன்னிக்க வேண்டும். நான் சொல்வதை கவனமாய்க் கேள். அரசன் தனது பிரஜைகளை வதை செய்யக் கருதலாமா? குடிஜனங்களின் பாதுகாப்பு மகாராஜா கையில் அல்லவா இருக்கிறது? நீ இந்த வனத்திற்கு அதிபதி—அரசன். இந்த தீமையற்ற மிருகங்களெல்லாம் உனது குழந்தைகளல்லவா? அவைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டுவது அரசனாகிய உன் கடமையல்லவா? மேலும் அந்த சாந்த மிருகங்கள் உனக்கு என்ன தீங்கைச் செய்தன? உனக்கு மாமிசம் புசிக்கவேண்டுமானால் உன்னுடைய குழந்தையை கண்டதுண்டமாக அறுத்து கறி சமைத்துச் சாப்பிடுவாயா? எத்தனையோ பெரியவர்கள்—யோகிகள்—புண்ணியாத்மாக்கள் இவ்வனத்திலிருக்கிறார்களே! அவர்களெல்லாம் மாமிசம் தான் அருந்துகின்றார்களா? மாமிசம் புசிக்காவிடில் பிராணன் நிற்காதா? கிடைத்தற்கரிய மானிடப் பிறவி கிடைத்ததுமல்லாமல் வனத்திற்கு மகாராஜா பதவியும் பட்டமும்



பெற்ற நீ "அஹிம்ஸா பரமோ தர்ம" என்ற மகா தத்துவத்தை கைக்கொண்டு ஒரு ஜீவனுக்கும் தொந்தரவு செய்யாமல் வாழ்வாயானால் பேரானந்தப் பதவியைப் பெறுவாய். அண்ணா! வேண்டாம். விட்டுவிடு இன்றோடு இவ்விபரீதச் செய்கையை!

வேடன்:—சாமியாரே! நான் அந்த மானைக் கொல்லப்போகும் சமயத்தில் அலறித் துடிப்பது ரொம்ப ரொம்ப சங்கடம்தான். நீர் சொன்னதைக் கேட்டு புத்தி கொஞ்சம் கொஞ்சமாக வருகிறது. பிராணிகளைக் கொன்றதெல்லாம் நினைப்பு வருகிறது. பெரியவரே, ஒரு காரியம் கேட்கவேணும். மிருக வேட்டை செய்யாமல் நாங்க சாப்பாட்டுக்கு என்ன செய்வது? உங்க உபதேசம் கொஞ்சம் கொஞ்சமாக மனதை திருப்பத்தான் செய்கிறது. நல்ல உபதேசம் தான். சாப்பிடாமல் இருக்க முடியுமா? அதைச் சொல்.

(வேடன் நமஸ்கரிக்கிறான்)

உபகுப்தன்:—(ஆசீர்வதிக்கிறான்) அண்ணா! அரசே! மங்களம் உண்டாகுக. சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

[இந்த சமயத்தில் சமீபத்திலுள்ள நீரோடையில் வாஸவதத்தா பாங்கியர்களோடு தோணியோட்டி விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். தற்செயலாக உபகுப்தனை பார்த்துவிடுகிறாள்]............

அன்பா! உனக்கு உபதேசம் தருகிறேன். பரந்த இவ்வுலகில் வசிக்கும் உயிர்ப்பிராணி ஏதுவாயிருந்த போதிலும் மனோவாக்கு மெய்களினால் ஹிம்சிக்கக்கூடாது. இதுதான் உறுதியான உபதேசம். புத்தமதத்தின் மூலதத்துவமுமிதுவே. அன்பு ஒன்றையே கடைப்பிடித்து நடப்பாயாக!

(வேடன் வணங்கி நிற்கிறான்)

[உபகுப்தனைக் கண்டு வாஸவதத்தா ஓடோடியும் வருகிறாள்]

வாஸவதத்தா:—ஸ்வாமி, அடியாள் நமஸ்கரிக்கிறேன்.

உபகுப்தன்:—(ஆச்சரியமாக)....ஹா; வாஸவதத்தா, தங்கா! இங்கு நீ ஏன் வந்தாய்?

வாஸவதத்தா:—ஸ்வாமி, சமீபத்தில் அதோ தெரிகிற நீரோடையில் பாங்கியர்களுடன் தோணியோட்டி விளையாடிக் கொண்டிருந்தேன். அப்போது தங்களைக் கண்டேன். ஓடோடியும் வந்தேன். இந்த அடிமைமீது கருணைக்கடலாகிய தங்களுக்கு ஏன் எள்ளளவும் கருணை பிறக்கவில்லை? அதோ அந்த வேடனுக்குகூட ஆசீர்வாதம் செய்து அனுக்கிரகித்தீர்களே! இவ்வடிமையை—சதா தங்களை நினைந்து நினைந்து உயிர்வாழும் ஏழையைக் கண்பார்க்கக்கூடாதா? என்னையும் ஏற்றுக்கொள்ளுங்கள். சர்வகாலமும் உங்களையே நினைத்து உயிர்வாழ்கின்றேன். ஸ்வாமி! ஒரு வார்த்தை. என்னால் சகிக்க முடியவில்லை. இதுதான் தங்களுடைய அன்பின் மகிமையா?

உபகுப்தன்:—(நிதானமாக) பெண்ணே போது. நான் உன்னை வழியிலேயே நாடி வருவேன். அதற்கான காலம் வரட்டுமென்று காத்துக் கொண்டிருக்கிறேன்; சாந்தமாயிரு.

வாஸவதத்தா:—அதுவரையிலும் சகோதரி என்று தான் அழைப்பீரோ? அதற்குள் என் பிராணன் என்னைவிட்டுப் பிரிந்துவிடும் போலிருக்கிறதே! இப்படி சமயமாகவில்லை என்று சமாதானங்கூறி என்னைத் துன்பக்கடலுக்குள் தள்ளுகிறீர்களே!

உபகுப்தன்:—சகோதரி, என்ன வார்த்தை? வேண்டாம். (யோசித்து) போகட்டும். உன்னுடைய உள்ளக்கருத்தை ஒளியாது சொன்னாய். உண்மையில் என்மீது நீ அளவிலா நேசங்கொண்டிருப்பதை நான் அறிவேன். எனது பக்தையான உனக்கு—என்மீது மிகுந்த பாசங்கொண்ட உனக்கு—நிச்சயமாகவும் பரிபூரண அனுக்கிரகம் தருவேன். ஆனால் இன்னும் அதற்கான காலம் வரவில்லை. காலம் சமீபித்து வருகிறது. விரைவில் உன்னை நாடி வருவேன். இது சத்தியம் சென்று வா.

வாஸவதத்தா:—(தலைகுனிந்தவண்ணமாக) ஸ்வாமி கருணைகூருங்கள். அதோ அந்த அழகிய தோணியில் ஏறி நாமிருவரும் சொற்பநேரம் விளையாடுவோம் வாருங்கள். இதுகூட செய்யக்கூடாதா? வாருங்கள். தங்களது மலர்ப் பாதங்களைத் தொடலாமா?

உபகுப்தன்:—வேண்டாம் அம்மா! நான் சொல்லிவிட்டேன். காலமானதும் நானே வந்துவிடுவேன். கலக்கம் வேண்டாம் என்னை நம்பு.

வாஸவதத்தா:—(கலங்கிய கண்களுடன்) ஸ்வாமி, என்னுடைய ஜீவன் உங்களுடைய கையில் இருக்கிறது. தங்களது வார்த்தையை மறந்துவிடக்கூடாது.

[உபகுப்தனையே பார்த்துக்கொண்டு ஏங்கி நிற்கிறாள். உபகுப்தன் போய்விடுகிறான்.]

(திரை)

(தொடரும்)



# கம்பரும், இராமாயணமும்

(திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை)

எழுதும் பொருளைப்பற்றிச் செம்மையாக விளக்கினால் அந்த நடை வெற்றியடைந்த நடையென்று ஹாக்லிட் (Haglitt) என்னும் ஆங்கிலக் கவிஞர் மொழிந்திருக்கிறார். அதனைக் கவனிக்கும்போது கம்பர் நடை வெற்றிபெற்ற சிறந்த நடையென்றே சொல்ல வேண்டும்.

தமிழ்க் காவியங்களில் ஜீவக சிந்தாமணியையும், கந்தபுராணத்தையும் கம்ப ராமாயணத்திற்கு ஒப்பிடலாம். ஆயின், அவைகளைவிடக் குறைவில்லாத எண்ணங்கள் அமைந்து சிறந்து காண்பது கம்ப ராமாயணமெனக் கூறுவது மிகையாகா. பூ, பழம், இளமை, அன்பு, அழகு, விளையாட்டு, உற்சவம், களிப்பு, முதலிய பொருள்களின் அருமைகளைக் கம்பர் அவற்றின் தகுதிக்கேற்ப நன்கு விவரித்திருக்கின்றார். இயற்கையின் இனிய காட்சிகளை விவரிப்பதில் முழுத்திறமை வாய்ந்தவர். கண்களால் கண்டு, எண்ணங்களை அறிவதில் கம்பர் மிகச் சமர்த்துடையவர்.

இராகம் செயற்கையல்ல. இயற்கை ரூபத்திற்கும் விஷயத்திற்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. அழகாகவும், பூரண முடிவாகவும் கவி பாடும் சக்தி கவிஞருக்குச் சொந்தம். வீணையில் அமைக்கப்பட்டுள்ள தந்திகளில் அதனுடைய ஸ்வர ஸ்தானங்களைத் தடவி நாதமெழுப்புவது போலத் தமிழ்ச் செய்யுட்களின் சந்த வகைகளைத் தழுவி ஓசையின்பம் தவழும் இனிய செய்யுட்களை இசைப்பதில் கம்பர் கைதேர்ந்தவர். சில சமயங்களில் கம்பர் காவிய நடை ஆற்றொழுக்காயிருந்த போதிலும், உருவத்தையும், அழகையும் நாம் கண்டு மகிழும்படி அவர் அமைத்திருக்கும் வனப்பு பாராட்டற்குரியதே.

இராமாயணச் செய்யுட்களின் வரிகள் ஆழ்ந்த கருத்தும், அமைந்த சொல்லும், இனியசுவையும், எழுந்த சிறப்பும் கொண்டன. காவியத்தில் பயிலப்படுகிற சுவைமலிந்த தீந்தமிழின் அமிழ்த மயமான ஜீவநதி. ஆழமாயும், தெளிவாயும், மிருதுவாயுமிருப்பதுடன் உற்சாகத்தையும் ஓங்கச் செய்கின்றது.

கம்பர், கலைக்கு வேண்டப்படுகிற உபாயங்கள் ஒன்றையும் விடாது உபயோகித்து, அச்சூழ்ச்சிகளில் தலைசிறந்து விளங்குகின்றனரே யன்றி, கலையிடுகிற கட்டளைக்குக் கீழ்ப்படிகின்றவராயில்லை.

அழகும், வியப்புந் துவங்குகின்ற தமது சொந்தக்கற்பனையைக் காவியத்தில் காண்பிப்பதும், ஆழ்ந்தகருத்தும், மதிப்பும் வாய்ந்த சம்பாஷணைகளை மொழிவதில் கவனமும் கொண்டவர் கம்பர். அவருடைய கவி வரிகள் இனிமையான இராகத்தைக் கொண்டிருப்பதில் பெயர் பெற்றவை.

கவியின் எல்லையை அதிகப்படுத்தித் தத்துவ சாஸ்திரங்களையும் தமது இராமாடணத்தில் அடங்கும்படிச் செய்யும் வல்லமை கவியரசராகிய கம்பருக்கு அமைந்த சிறப்பு அதிசயம்!

ஆன்ம தத்துவ ஞான எண்ணத்துடன் மிகவும் வியக்கு கூறும்படி பல அருமைக் கவிகளைப் புனைந்து பாடுவதில் கம்பர் மிகவல்லவர். சுருங்கக்கூறுமிடத்தில் மேன்மை, அழகு, தெளிவு, பலம், ஆழ்ந்த கருத்துகள் முதலியன கற்று ஆராய்ந்து தெளிந்த கவி யொருவருக்கு அமைய வேண்டிய இன்றியமையாத குணங்களெல்லாம் ஒருங்கே கம்பருக்கும் அமைந்து, அவைகள் நடையில் திகழ்ந்து சிறந்து காண்கின்றன.

கம்பர் கவியில் வெற்றி பெற்றதற்கு அவருடைய ஆழமான கல்வியே காரணமெனலாம். தமிழ் கற்ற கவிவல்லோரில் கம்பர் மிகச் சிறந்தவர். பழமையான தமிழ்க் காவியங்களிற் காணும் சொற்கள் பதங்கள், எண்ணங்கள் முதலியன கம்ப ராமாயணத்தில் அடங்கியிருக்கின்றன.

அப்பழங் காவியங்களில் வருகிற "நேடுவார்", "எழுநல்", "ஐயவி" "ஆறமுல்" "வானைப்புரவி,, "வேழமுத்து" "முத்திவித்து" "கங்கைவார் சடைக்கற்றையன்" "முதலிய பதங்கள் கம்பரால் தகுதியாக உபயோகிக்கப் பட்டிருக்கின்றன'

திருக்குறள், பத்துப் பாட்டு, புறநானூறு சிலப்பதிகாரம், சிந்தாமணி, மணிமேகலை, சூளாமணி, வளையாபதி, மலைபடுகடாம், குறிஞ்சிப் பாட்டு, தேவாரம் முதலிய நூல்களைக் கம்பர் மிகுதியாகப் பயின்றிருப்பதும் அப்பயிற்சியின் மொழிகளும், பதங்களும் தமது காவியமாகிய இராமாயணத்தில் பிரயோகிக்கப் பட்டிருப்பதும், கம்பரது ஆழ்ந்த கல்வியையும், தேர்ந்த புலமையையும் நன்கு காட்டுகின்றன.







# தயானந்தரும் தமிழர் கொள்கைகளும் *

—வித்வான் மா. இராசமாணிக்கம், P. O. L.—

'ஆரிய சமாஜம்' என்பது தயானந்தர் கொள்கைகளைப் பரப்ப எழுந்ததோர் இயக்கம் ஆகும். இங்கு 'ஆரிய சமாஜம்' என்னும் தொடரின் பொருளைக் காணல் இன்றியமையாதது. 'சமாஜம்' என்பது 'கூட்டம்', 'சங்கம்', 'கழகம்' என்னும் பொருளில் வழங்கப் பெறுவது. 'ஆரிய' என்னும் சொல் ஆராய்ச்சிக்குரியது. சரித்திராசிரியர்கள் 'ஆரியர்' என்னும் சொல் இந்தியாவிற் குடியேறிய ஓர் இனத்தவரைக் குறிப்பதாகக் கொண்டுள்ளனர். இவர்கள் மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாவுக்கு வந்தவர்கள் என்பது அவர்கள் துணிபு. இங்ஙனமே மத்திய ஆசியாவினின்றும் புறப்பட்டுப் பாரசிகம் முதலிய நிலப்பகுதிகட்கு ஒரு பிரிவினரும் ஐரோப்பிய நிலப்பகுதிகட்குப் பிறிதொரு பிரிவினரும் சென்றனர் என்றும் அவர்கள் கூறியுள்ளனர். எனவே, 'ஆரியர்' என்னும் சொல் 'திராவிடர்' அல்லாத இந்தியாவிற் புகுந்த—பிற நாடுகளிற் புகுந்த ஒரு கூட்டத்தாரைக் குறிக்கும் சொல் என்பது சரித்திராசிரியர்கள் கொண்டுள்ள முடிபு. இதுகொண்டு போலும் இற்றைநாளில் ஹிட்லர் ஜெர்மனியில் 'ஆரியர்', ஆரியர் அல்லாதார் என்னும் வேறுபாட்டைக் கிளப்பியுள்ளனர்! பெயர்பெற்ற இந்திய சரித்திராசிரியரான வி. ஏ. ஸ்மித் என்பார் ஆரியர்—'உறவினர்! எனப் பொருள் கூறியுள்ளார். தயானந்தரோ எனின், 'ஆரியர்—உயர்ந்தவர்' எனப் பொருள் கூறியுள்ளார். இப்பொருள் தமிழகத்தே கம்பர் காலத்தே வழங்கப்பட்டதாக அப்பெருமானது இராம காதையால் விளக்கமுறத் தெரிகிறது. கும்பகர்ணன் இறுதியாக இராவணனிடம் விடைபெற்றுச் செல்கையில் சொன்ன சொற்களில் 'ஆரிய!' என்று இராவணனை விளித்ததாகக் கம்பர் கூறியுள்ளார்:

"இற்றைநாள் வரைமுதல்
[யான்முன் செய்தன
குற்றமும் உளஎனில்
[பொறுத்தி: கொற்றவ!
அற்றதால் முகத்தினில்
[விழித்தல்; ஆரிய
பெற்றெனென் விடை"எனப்
[பெயர்ந்து போயினன்."

இங்குக் கும்பகர்ணன் இராவணனை 'ஆரிய!' என அழைத்தமை 'மேலோனே! உயர்ந்தவனே!' என்னும் பொருளிலாகும். எனவே, இதுகாறும் கூறியவற்றை ஒன்றுபடுத்தி நோக்குங்கால், இச்சொல், முதலில் ஒரு வகுப்பாரைக் குறித்து, அவ்வகுப்பார் வட இந்தியாவில் அரசு செலுத்த நேர்ந்த-பின் 'உயர்ந்தவர்' எனப் பொருள்படுத்தப்பட்டு, அங்கிருந்து ஆரியர் கலை தமிழகத்தே பரவிய இதிகாச காலத்திலும் சமண—பௌத்த மதங்களின் காலத்திலும் (கி. மு. 1400—கி. பி. 700) தமிழகத்தில் வழங்கப்பெற்றிருக்க வேண்டும் என ஒருவாறு ஊகிக்கலாம்.

இனி, தயானந்தர் கொள்கைகட்கும் தமிழர் கொள்கைகட்கும் உள்ள ஒருமைப்பாடுகளைக் காண்போம். இவை காண்பதற்கு முன் தமிழரது தொன்மையை நாம் நினைவில் வைத்தல் நலம். அஃதாவது தமிழர் இமய முதல் கன்னி முனைக்கும் அப்பாற்பட்ட (கடலால் கொள்ளப்பட்ட) நிலப்பகுதி வரை பல ஆயிரவாண்டுகட்கு முன் பரவியிருந்தவர் என்பதே. இன்றைத் தமிழகத்தோடு தமிழர் வாழ்ந்தவர் அல்லர்;-இந்தியா முழுவதுமிருந்து, பின், விந்த மலைக்குத் தென்பாற்பட்ட நிலமுழுதும் பரவியிருந்து அதன் பின் வேங்கடத்துக்குத் தென்பால் நிலைபெற்றது தமிழ்மொழி என்பதைத் தமிழ்நூல் அறிவும், சரித்திர ஆராய்ச்சி அறிவும் உடையவர் நன்கறிந்துள்ளனர். சென்ற அக்டோபரில் சென்னைப் பல்கலைக் கழக மண்டபத்தே சொற்பொழிவாற்றிய ஹெராஸ் பாதிரியாரும் இவ்வுண்மையை வற்புறுத்திக் கூறியிருத்தல் படித்து இன்புறத்தக்கது. "மோஹஞ் ஜோ—டாரோ என்னும் இடத்தில் தோண்டி எடுக்கப்பட்ட சிறந்த நகரம் ஆரியர்க்கு முற்பட்ட திராவிடருடைய நாகரிகத்தைக் காட்டும் சின்னமாகும். அவ்வாராய்ச்சியிற் கிடைத்த அப்பழைய மக்களின் எழுத்துக்கள் சங்கத்தமிழ் எழுத்துக்களை ஒத்துள்ள. அவை வலப்புறமிருந்து இடப்புறமாக வாசிக்கப்பட்டவை. அவை திராவிடர் சித்திர எழுத்துக்களைச் சேர்ந்தவை; இச்சித்திர எழுத்து முறை சங்க நூல்களில் கூறியுள்ளபடி தமிழரால் கையாளப் பட்டதாகும்..................இறந்த இந்நகரமக்களும் திராவிடரும் (தென் இந்தியர்) ஒன்றுபட்டவர்; ஒரே பாஷையைப் பேசியவர்கள்; ஒரே நாகரிகத்தைப் பெற்றிருந்தவர்கள். இம்முடிவு இந்நகரச் சாஸன எழுத்துக்களைக் கொண்டு வலியுறுத்தப்படுகிறது. ஒரு சாஸனத்தில் காணப் பெற்ற தொடர் ஒன்று தமிழில் ஒப்பிலா

* இது சென்னை, 'தென் இந்திய ஆரியசமாஜத்'தில் ஸ்ரீ தயானந்தர் நாள் கொண்டாடப்பட்டபோது கார்ப்பொரேஷன் கவுன்சிலர் திரு. எம். பாலசுப்பிரமணிய முதலியார், எம்.ஏ. தலைமையின் கீழ்ப் பேசப்பட்டது. (2-11-37).

3

மணிப் புலவர் பாடிய செய்யுட்களில் ஏறக்குறைய அப்படியே காணப்படுகிறது. இந்நகர மக்கள் சுமார் கி. மு. 5600 ஆண்டுகட்கு முன்னரே வான சாஸ்திரத்தில் நிபுணராய் விளங்கினர். இக்குறிப்பிட்ட காலம் இந்நகரத்து ஆராய்ச்சியால் தெரிவது. இந்நகரத்தின் அடியில் மேலும் ஆராய்ச்சி நடத்தினல், திராவிடர் நாகரிகம் மேலும் முற்பட்டதாக மாறினும் மாறலாம்........................"

(இச்செய்தி அக்டோபர் 18, 20, 21—ஆந் தேதிகளில் வெளிவந்த 'ஹிந்து', 'மெயில்' தாள்களில் வந்துள்ளது)

(1)

இவ்வரிய ஆராய்ச்சியால் தமிழின் தொன்மை தனிப்பட்ட முறையில் நன்கு விளக்கமாதல் காண்க: "இறந்துபட்ட அத்திராவிட மக்கள் வழிபட்ட மதம் 'சைவம்' என்பதைப் பறையறைந்து அறிவிப்பன போல அந்நகரத்தில் கணக்கற்ற சிவலிங்கங்கள் காணப்படுகின்றன. இதனுல் உலகத்தின் மிகப் பழைய மதங்களில் 'சைவ சமயம்' ஒன்று என்பதிற் சிறிதும் ஐயமே இல்லை" என்று சர் ஜான் மார்ஷல் 'சிந்துப் பிரதேச திராவிடர் நாகரிகம்' என்னும் பெரிய நூலில் அரிய முறையில் அறைந்துள்ளமை அறியற்பாலது. எனவே, பண்டைத் தமிழ் மக்களுடைய மதம் 'சைவம்' என நாம் துணிவுடன் கொள்ளலாம். இன்றளவும் தென்னுட்டில் பண்டுதொட்டே உயர்ச்சி பெற்றதும் சைவம் ஒன்றேயாம். இஃது உலகறிந்த உண்மை. தமிழர் சைவசித்தாந்தப்படி சாதிபேதமற்றவர்; சைவ வழிபாட்டினர்; மந்திரங்கள் அற்றவர். இவ்வுண்மையை மிகப் பிற்பட்டதான பெரிய புராணத்துள் கூறப்பட்டுள்ள நாயன்மார் வரலாறுகளைக் கொண்டும் நன்குணரலாம். சாதி பேதமற்ற தன்மையே—'சைவ மதம்' என்னும் மாளிகைக்கு அமைந்த மகத்தான அடிப்படையாகும். மேலும்,

"பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்
[சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்"

என்பது தமிழ் மறை. இதுவே தமிழர் தத்துவம். இதனையே தயானந்தர் வற்புறுத்திக் கூறியுள்ளார். இதுவே வேதங்களின் கருத்தென்றும் அப்பெரியார் கூறுகின்றார். வடநாட்டில் தொழில் பற்றியே பிரமா, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் நான்கு பிரிவுகள் உண்டாயின. தமிழகத்தில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்னும் பிரிவுகள் இருந்தன. தமிழ்நாட்டு அரசர் வேளாளரிடம் பெண் கொண்டனர்; 'சோழன் இளஞ்சேட் சென்னி அழுந்தூர் வேளிடம் மகட் கொண்டோன்; அவன் மகனுன கரிகாலன் நாங்கூர் வேளிடை மகட் கொண்டான்' என வரும் நச்சினர்க்கினியர் உரை காண்க. அரசர் மறவர் மகளையும் மணத்தல் மரபென்பதும் புறநானூற்றுல் அறியக் கிடக்கிறது. சங்க நூல்களுள் சாதிபற்றிய பேச்சே—திருமணத்தில்— வற்புறுத்தப்படவில்லை என்பது அறியத் தக்கது. தொழில்பற்றித் தோன்றிய பிரிவுகள் நாளடைவில் 'சாதி'ப் பிரிவுகளாக—பிறப்புப்பற்றிய பிரிவுகளாக மாறியது மக்களது அறியாமையால் என்பது விளக்கமன்றோ?

(2)

இனி, தயானந்தர் 'பெற்றோர் கடமை'யை விளக்கமாகக் கூறியுள்ளார். பண்டைத் தமிழ்ப் பெற்றோர் தம் பிள்ளைகளை எந்நிலையில் வளர்த்து வந்தனரோ அம்முறையையே தயானந்தரும் சிறிதும் பிழைபடாது செப்புதல் எமது இதயத்தைக் குளிர்விக்கிறது. பண்டைத் தமிழ்த் தாய் ஒருத்தி தன் கடமை, தந்தையினது கடமை, தனயன் கடமை இவற்றை முறையே இயம்பி மகிழ்தல் காணத்தக்கது. மகனைப்பெற்று வெளி உலகத்துக்கு (நாட்டுச் சேவைக்கு)த் தந்துவிடல் எனது தலையாய கடன்; அம்மகனை அறிவிற் சிறந்தவனுக்குதல் தந்தைக்குக் கடன்; வாளேந்தி—வேலேந்திப் போர்புரிந்து யானையைக் கொன்று மீளல் என் மகனது கடமை" எனக்கூறும் வீரத்தாயின் கூற்றிலிருந்து பண்டைப் பெற்றோர் தம் மக்களை எங்ஙனம் தம் கடமை அறிந்து வளர்த்து வந்தனர் என்னும் பேருண்மையை நன்கறியலாம்.

"ஈன்று புறந்தருதல்
[என்தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல்
[தந்தைக்குக் கடனே;
• • •
ஒளிறுவாள் அருஞ்சமம் உழக்கிக்
களிறெறிந்து பெயர்தல்
[காளைக்குக் கடனே."

—புறநானூறு

மக்கள் ஒழுக்கமுடையவராக நடந்துகொள்ளப் பெற்றோர் கவனித்தல் வேண்டும் என்பது தயானந்தர் கூற்று. 'மணி மேகலை' என்னும் மாண்புறு தமிழ் நூலில் 'ககந்த சோழன்' என்னும் முடிமன்னன் ஒரு பெண்ணைத் தீய நோக்குடன் பார்த்தனர் என்னும் ஒரே காரணங் கொண்டு தன் பெறுதற்கரிய மக்கள் இருவரையும் வாளால் எறிந்தனன் என்னும் அரிய செய்தி அறியக்கிடக்கிறது. இவ்வொன்றிலிருந்தும் வேறு பல செய்திகளினின்றும் தமிழகத்துப் 'பிள்ளை வளர்ப்பு முறையை' நன்கு உணரலாம். இதனை மேலும் விரிப்பிற்பெருகும்.

(3)

தலைவன் தலைவி இவ்விருவர் தம் சம்மதம் பெற்றதாகத் 'திருமணம் இருத்தல் வேண்டும்' என்பது தயானந்தர் கொள்கை. இதுவே பண்டைத் தமிழ் நூல்கள் பறையறைவது. காதல் மணம் கனிந்த பின்னரே கற்பு மணம் தமிழரிடை நடைபெற்று வந்தது. இப்பழக்கம் இன்று மேனுட்டாரிடைப் பெருவழக்குடையதாக உள்ளது.

"தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயின்
ஒத்தல்"

என்பது இறையனுர் களவியற் சூத்திரம். அதற்கு உரைகண்ட நக்கீரர் "ஞானத்தானும் குணத்தானும் உருவானும் திருவானும் இருவரும் ஒத்தவ்ராயிருத்தல்" எனக் கூறிப் போந்தனர். இதனையே தயானந்தரும் வற்புறுத்திக் கூறியுள்ளமை கூர்ந்து நோக்கற்பாலது. இங்ஙனம் மனமொத்த முறையில் நடைபெறும் மணமே இல்வாழ்க்கைக்குரிய இயல்புறு மணமாகும் என்பதும் தயானந்தர் கொள்கை. இதனையே தமிழ் மறை வருத்த வள்ளுவனுர்,



"அன்பும் அறமும் உடைத்தாயின்
[இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது"

என விளக்கமாகக் கூறியுள்ளார்.

"இல்லான் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை" எனப் பிற்காலப் புலவர் கூறியதும் இக்கருத்தே பற்றி என்க.

சம்பந்தி உணவைப்பற்றித் தயானந்தர் ஆதரித்துக் கூறியுள்ளார். இச்செய்தி பண்டைத் தமிழர் கையாண்டதேயாகும். அரசன் பலருடனும் உடனிருந்து உண்டதாகப் புலவர்களே சங்க நூல்களிற் பாடியுள்ளனர். இன்னும் பெரும்பாலான தமிழ் மக்கள் புதிதாகத் தோன்றிய சாதி—மத வேறுபாடுகளைப் புறக்கடையில் ஒதுக்கிவிட்டு, ஒன்றுபட்டு உண்ணலை யாண்டும் காணலாம். இப்பழக்கம் தமிழர் வாழ்க்கை முறையில் சர்வ சாதாரணமானது.

(5)

'உடலையும் உயிரையும் ஒரே காலத்தில் வளர்க்க வேண்டும்' என்பது தயானந்தரது அழுத்தமான கொள்கையாகும். இதனையே தமிழரும் தம் நூல்களில் வற்புறுத்தியுள்ளனர். 'உடலை வளர்த்தல் உயிர் வளர்த்தலாகும்' என்பது தமிழர் கொள்கை.

"உடலை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்பது திருமூலர் வாக்கு. இதனை விரிப்பின் மேலும் பெருகும்.

(6)

'விக்கிரக ஆராதனை' கூடாது என்பது தயானந்தர் கொள்கை. "'விக்கிரகம்', 'உருவம்' என்ற சொற்களே தமிழர்க்குப் புதியன. இவை தமிழகத்தார் அறியாதன. விக்கிரக வணக்கமே தமிழர்க்கில்லை. புராணத் தொடர்புடைய மதமும் விக்கிரக வணக்கமும் பார்ப்பனரால் தமிழகத்தில் நுழைக்கப்பட்டன; ஆதலின் மேற்கூறிய சொற்கள் தமிழர்க்குரியவை அல்ல" என்று அறிவிலும் ஆராய்ச்சியிலும் ஈடும் எடுப்புமற்ற கால்ட்வெல் பாதிரியார் தமது திராவிட ஒப்பிலக்கண நூன் முகத்தில் (3-ம் பதிப்பு, பக்கம் 47) கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது. 'கந்தழி', என்னும் தொல்காப்பியர் சொல்லுக்கு "ஒரு பற்றுக்கோடும் இன்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருளுத் என்று நச்சினர்க்கினியர் கூறியின்" தனும் பண்டைத் தமிழரது கடவுட் கொள்கையைக் கவினுறக் காட்டுவதாரும். தமிழகத்தில் இவ்விக்கிரக வணக்கம் கி. மு. 4,3-ம் நூற்றாண்டுகளில் தமிழகம் நுழைந்த சமண—பௌத்தரால் உண்டான தெனச் சரித்திராசிரியர் பலரும் கூறுகின்றனர். அவ்விரு மதத்தவர் கோயில்களே இன்று பெரும்பாலான சைவ வைணவக் கோயில்களாக மாற்றப்பட்டுள்ளன என்பதும் சாஸனப் பரிசோதகர்களின் முடிபாகும். உண்மையும் அதுவே. பண்டைத் தமிழர் இக்கால கிரிஸ்தவர்—முஹம்மதியர் போல அருவான ஆண்டவனை வழிபட்டனர் என்பதே தமிழ் நூலாராய்ச்சியாலும் பகுத்தறிவாலும் சரித்திர ஆராய்ச்சியாலும் அறியத்தகுவது. சிவயோகியரான சிவவாக்கியர்,

"நட்டகல்லைத் தெய்வமென்று
[நான்குபுட்பம் சாத்தியே
சுற்றிவந்து முணுமுணுத்துச்
[சொல்லுமந்த்ர மேதடா?
நட்டகல்லும் பேசுமோ? நாதனுள்
[இருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை
[அறியுமோ?"

என நவின்றுள்ளதை நன்குணர்க. இப்பொழுதைக்கு இருநூற்றாண்டுகட்கு முன்னிருந்த பட்டினத்தடிகளும்,

"கல்லினும் செம்பினுமோ இருப்பா
[னெங்கள் கண்ணுதலே?"

எனக் கழறியுள்ளதும் கவனிக்கற்பாலது.

(7)

'கருமாதி, திவசம் போன்றவை வேதங்களிற் கூறப்படவில்லை ஆதலின் அவை பிற்காலத்தில் நுழைக்கப்பட்ட பொருளற்ற சடங்குகள்' என்பது தயானந்தரது அழுத்தமான அபிப்பிராய மாகும். உரையாசிரியர் உரைகளை (அவை நூலாசிரியர் காலத்துக்குப் பலநூற்றாண்டு கட்குப் பின் செய்யப் பெற்றவை யாதலின்) உதறித் தள்ளிச் சங்க நூல்களையும் தொல்காப்பியத்தையும் நுணுகி நடுநிலையினின்று ஆராயின், இச் சடங்குகள் தமிழராற் கையாளப்பட்டன அல்ல என்பது நன்கு விளங்கும். அதிகமேன்? புரோகிதன் இச் சடங்குகட்குக் கூறும் மந்திரங்கள் தமிழில் இல்லாமல் வடமொழியில் இருத்தல் ஒன்றே இச் சடங்குகள் தமிழர் கையாண்டனவ அல்ல என்னும் உண்மையைப் பறையறைவது போலாகுமன்றோ?

(8)

'எல்லோரும் இன்புறப் பிரார்த்தனை செய்வதே நமது நோக்கமாக இருத்தல் வேண்டும்' என்பது தயானந்தர் கொள்கை. இதுவே தமிழர் கொள்கை என்பதை "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்" என்பதனுலும்,

"எல்லாரும் இன்புற்றிருக்க
[நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன்
பராபரமே"

என்னும் தாயுமானவர் பாடலாலும் பிறவற்றாலும் நன்குணரலாம். 'மணிமேகலை' என்பவள் தனக்கென வாழாதவள் என்பதை அவளது வரலாறே நன்குணர்த்தும். 'பிரார்த்தனை நேரிய முறையில் அமைதல் வேண்டும்' என்பது தயானந்தர் கொள்கை. அதுவே தமிழரது பிரார்த்தனையின் மர்மமாகும். இதனை,

"யாம் இரப்பவை
பொன்னும் பொருளும்
[போகமும் அல்ல; நின்
அன்பும் அருளும் அறமும்..........."

என வரும் பரிபாடல் அடிகள் வலியுறுத்தல்கண்டு தெளிக.

சுருங்கக்கூறின் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தமிழர் கையாண்ட நேர்மையான முறைகள் மிகப் பலவாகும். அவற்றை இப்போதுள்ள எல்லா இயக்கங்களிலும் சமயங்களிலும் காணலாம். மிகப் பழைய தமிழர் வாழ்க்கையில் இல்லாத எக்கொள்கையும் இப்பொழுது இதுகாறும் புதிதாகத் தோன்றவில்லை. ஆரிய சமாஜக் கொள்கைகளில் சத்தானவை

அனைத்தும் தமிழ் நூல்களில் கூறப்பட்டுள்ளன. தமிழர் அவற்றை அறியாமையின், தங்கள் மூதாதையர் நாகரிகத்தையும் மதப் பெருமையையும் தந்நலமற்ற வாழ்க்கை முறையையும் அறியாது தவிக்கின்றனர். இப்பொழுது 'சீர்திருத்தம்' என்னும் சுழல் காற்றில் வெளிப்படுவன அனைத்தும் 'புதியன' என மருள்கின்றனர். தமிழர் தம் முன்னோர் கொள்கைகளைக் கடைப்பிடிப்பரேயாயின் தயானந்தரின் தூய கொள்கைகளையும் கைக்கொண்டவராவர். தயானந்தர் தம் தூய கொள்கைகள் அனைத்தும் பழந்தமிழர்—நம் மூதாதையர் கொள்கைகளே என்பதில் எள்ளத்தனையும் ஐயம் வேண்டா.

## எறும்பு

(புதுவை—மு. த. பிள்ளை)

எறும்பே! எறும்பே! எழில்மிகு எறும்பே!
எங்கும் ஊர்ந்து திரியும் எறும்பே!
குறும்புகளொன்றும் செய்திட மாட்டோம்;
கூடி யெம்முட னாடிடு வாய். 1.

புற்றி லொன்றாய் வாழ்ந்திடு வீர்;
பொறாமைக் குணமும் விட்டிடு வீர்;
ஒற்றுமை யாக உழைத்திடு வீர்;
ஓரம் சிறிதும் இன்றியே தான். 2.

கார் நாள் வருமுன் உணவுகளைக்
கருத்தாய்ச் சேர்த்துக் கொண்டிடு வீர்;
கார் நாள் போம்வரை புற்றினிலே
கருத்தொரு மித்து வாழ்ந்திடு வீர். 3.

கருமமே கண்ணாய்க் கொண்டிடு வீர்;
கடுகி ஓடி உழைத்திடு வீர்;
பருத்த பண்டங்கள் கிட்டிடி னே
பலருங் கூடிச் சுமந்திடு வீர். 4.

சண்டை சச்சர வும்மிடத்திற்
சற்றும் காண்கிலோம் சிற்றெறும் பே!
அண்டை வந்தவ் வருங் குணத்தை
அறைவா யெங்க ளகங் குளிர. 5.

உலகில் உமைப் போல் நாங்களுமே
ஒத்து வாழ்ந்திடில் நல மிகவே
இலங்கும் தேசம் இன்புறு மே
இராஜன் எமக்குப் பின் னேனோ! 6.

## சீன ஜப்பான் மத்தியஸ்தம்?

சீனாவும் ஜப்பானும் சமாதானம் செய்துகொள்ளப் போவதாய் வெளியுலாவும் வதந்தியால் அனுகூலமேதுவும் ஏற்படப்போவதில்லை என்றே சீன அதிகாரிகள் கூறுகின்றார்கள். பிரிட்டனோ அமெரிக்காவோ சீனாவுக்கு உருவான முறையில் எவ்வித உதவியும் செய்யப்போவதில்லையென அவர்கள் தெரிவிக்கின்றனர். தவிர மார்ஷல் சியாங்கெய்ஷேக் இறுதிமட்டும் ஜப்பானியரை எதிர்த்து நிற்பதென உறுதிகொண்டுள்ளார். சமீபத்தில் ஏற்பட்ட தோல்விகளோ சீன ராணுவத் தலைவர்களைச் சிறிதேனும் கலங்கச் செய்யவில்லை. இத்தோல்விகள் அவர்கள் எதிர்பார்த்ததுதான். சீனத் துருப்புகள் கட்டுப்பாடுகளுடன் எதிர்த்துப் போராடி வருவது பாராட்டற்குரியதாகும்.

ஜெனரல் சியாங்கெய்ஷேக் பத்திரிகை நிருபருக்குப் பேட்டி அளித்துப் பேசுங்கால் பின்வருமாறு தெரிவித்தார்:—

"எங்களிடை மூண்டுவரும் தகராறைத் தீர்க்க சீனாவும் ஜப்பானும் நேரடியாய்ச் சமரசப் பேச்சுகள் நடத்துவதென்ற ஆலோசனையை சீன சர்க்கார் ஆதரிக்கவில்லை.

போர் நிலைமை மிகுந்த நம்பிக்கையளிப்பதாகவே காண்கிறது. சீனாவில் மீண்டும் நீதி நிலைநாட்டப்படும் வரை போராட்டத்தை நடத்துவதென்றே சீனா உறுதிகொண்டிருக்கிறது."

மேலும் அவர் தமது ராணுவ நிலைமையைப்பற்றிப் பேசுங்கால் "சீனர்களின் யுத்தோபாயத்தின் இரகசியம் போர் வன்மையைப் பெருக்குதலும், அதே சமயத்தில் பகைவரின் சக்தியை அழித்து விடுதலுமாகும். சீனாவுக்குப் பகைவரை எதிர்க்குஞ் சக்தியிருந்து வருமளவும், தாற்காலிக வெற்றிகள் எவ்விதமான உறுதியான பயனையும் நல்கிவிடாது." என்றார்.

தமது ராணுவ நிலைமையைப்பற்றி மார்ஷல் சியாங்கெய்ஷெக் திடநம்பிக்கையுடன் வேலைசெய்து வருகிறார். ஜப்பானியர் நேருக்குநேர் நடத்[illegible] விழையும் சமரசத்தை அவர் நிரா[illegible]கரித்து விட்டார்.

## வேலூர் செட்டியார் இளைஞர் சங்கம்

இச்சங்கத்தின் வாராந்திரக் கூட்டம் 8-11-37 மாலை 4 மணிக்[illegible] ஸ்ரீமான் எஸ். எம். ஷண்முகஞ் செட்[illegible]யார் தலைமையில் நடைபெற்றது. தி[illegible]வாளர்களான எஸ். ஸ்ரீநிவாசகன்[illegible] எஸ். எம். கண்ணப்பன், எல். சொக்[illegible]லிங்கம், எஸ். எம். ஆதீனமி[illegible] முதலியோர்கள் சிரம்ப அழகா[illegible] விரிவுரையாற்றினர்கள்.

## கூந்தல் அலங்காரம்



ஜெர்மனியிலுள்ள கிராமப் பெண்மணிகள் தொன்றுதொட்டுப் படத்தில் காண்பதுபோல் தமது கூந்தலை அலங்கரித்துகொண்டு வருகிறார்கள்.

—N.I.A.



3-11-37-ந் தேதி கூடிய சென்னை மாகாண ஸ்திரீகள் மகாநாட்டிற்கு ஸ்ரீமதி ருக்மணி லட்சுமீபதி தலைமை தாங்கினார்.

—I.P.P.S.

## லாகூர் வைத்தியக் கல்லூரி



லாகூரிலிருக்கும் மன்னர் எட்வர்ட்டு வைத்தியக் கல்லூரி. இதனை சமீபத்தில் வைஸிராய் பார்வையிட்டார்.

—P.P.B.



பெர்லினில் கூடிய சர்வதேச வர்த்தகக் காங்கிரஸ் மகாநாட்டுக்கு பர்மா வர்த்தகர் சங்கப் பிரதிநிதியாக விஜயஞ் செய்த திரு. எஸ். ஆர். எம். ஜம்புலிங்கம் செட்டியார் அவர்கள் சென்னை வந்து சேர்ந்தபோது நண்பர்களால் சென்டிரலில் நன்கு வரவேற்கப்பட்டார்.

—P.P.B



## பிரஞ்சு விமானிகள்—மெல்போர்ன் ரயில்



பிரஞ்சு விமானப் படை மந்திரி பாரிஸ் மாநகரில் நடாத்திய ஓர் கூட்டு வைபவத்திற்கு 33,000 இளம் விமானிகள் வந்திருந்தனர். மேடையின் மீது நின்று மந்திரி பேசுவதைக் காண்க.

—C.B.



ஆஸ்திரேலியாவில் புதிதாய்க் கட்டப்பட்டிருக்கும் மெல்போர்ன்-ஸிட்னி எக்ஸ்பிரஸ் வண்டி. இதற்கு அமோகமான இழுக்கும் சக்தியுண்டு.

—N.I.A.

## நூதனக் கட்டிட அமைப்பு—ஒட்டகத் தபால்



ஆஸ்திரேலியாவில், கைத்தொழில் வியாபாரத்தால் சிறந்து விளங்கும் மெல்போர்னில், படத்தில் தோற்று மாறு நூதன முறையில் கட்டிடங்கள் நிர்மாணிக்கப்படுகின்றன.

—N.I.A.



ஆஸ்திரேலியாவில் ஒட்டகங்களால் இழுக்கப்படும் இத்தகைய தபால் வண்டிகளை இன்னமும் காணலாம்.

—N.I.A.



# சீனா, ஜப்பானை வெல்லுமா?

## சீன சோவியத் தலைவரின் பூரண நம்பிக்கை

நாங்கிங் அரசாங்கத்துடன் பத்து வருட காலம் ஓயாமற் போராடிக் கொண்டிருந்தவரும், வட சீனாவில் அமைந்த சோவியத் சர்க்காரின் மாஜி தலைவருமான மாவ் டிஸி—டங் என்பவரே இக்கட்டுரையை 'ரைனால்ட்ஸ் வீக்லி' எனும் பத்திரிகையில் வரைந்திருக்கிறார். ஜப்பானியர் ஏகாதிபத்திய வெறியை அனைவரும் ஒன்றுபட்ட ஓர் ஐக்ய முன்னணியின் மூலமாய் அடக்கிவிடலாமென்பது அவரது நம்பிக்கை. ஜப்பானை எதிர்க்கும் தமது சமூகத்தை இறைக்க இறைக்க ஊற்றெடுக்கும் ஜலாதார அணைக்கட்டென வருணிப்பதைக் காண்க:—

சீனாவில் ஜப்பானியாரை எதிர்த்து நீண்ட நாள் போர் தொடுக்க முடியாதென்பது பலர் கருத்து. கரையோரமான சில இடங்களையும், இதர சில முக்கிய ஸ்தலங்களையும் கைவசப் படுத்திக்கொண்டால் சீனாவால் ஜப்பானை அசைக்க முடியாதென்பது அவர்களது நோக்கம். ஆனால் அவர்களது இக்கூற்று அர்த்தமற்றது என்பதை செம்படையினர் சரித்திரத்தைப் பார்ப்பவர்கட்குத் தெரியவரும்.

சில சமயங்களில் செம்படைகள் கூமிண்டாங் * படைகளைவிடப் பத்து அல்லது இருபது மடங்கு எண்ணிக்கையில் குறுகியவைகளாகவேயிருந்தன. கூமிண்டாங் சைன்யங்கள் நம்மினும் மகத்வான தளவாடவசதிகளைப் படைத்திருந்தன. பொருளாதார அனுகூலங்களும் நம்மினும் அதிகமாய் அவை பெற்றிருந்தன. வெளி நாடுகளிலிருந்தும் அவைகட்கு உதவி கிடைத்துக் கொண்டிருந்தது. ஆனபோதிலும் வெள்ளைப் படைகளின் தாக்குதல்களையெல்லாம் காளிது வரையிலும் செம்படைகள் மிகுந்த வெற்றியுடன் எதிர்த்தே வந்திருக்கின்றன. இன்றைக்கு அதன் சக்தியும் பன்மடங்கு அதிகரித்திருக்கிறது.

இதற்கு காரணங் கூறுகிறோம். செம்படைகளும், சோவியத் அரசாங்கமும் இருக்குமிடங்களில் மக்கள் பாறைகளைப் போன்ற உறுதியான மனோ நிலையுடன் நாட்டைக் காத்து வருகின்றனர். சோவியத் அரசாங்கத்திலிருக்கும் ஒவ்வொரு வீரனும் தனது சர்க்காரின் விரோதியை எதிர்க்கும் மனப்பான்மையுடையோனாகவேயிருக்கிறான். ஒவ்வொரு வீரனும் தனக்காகவும், தான் சரி என்று நம்பும்படியான ஒரு காரியத்திற்காகவுமே போராடுகிறான். இத்தகைய வீரன் பிறரால் தூண்டப்பட்டு யுத்த அரங்கத்திற்குச் சென்றவனல்ல என்பதை மறந்துவிடலாகாது.

இரண்டாவதாக சோவியத் போராட்டங்களில் மக்களுக்குத் தலைமைவகித்து நிற்பது சாதாரண மனிதர்களன்று. அவர்கள் திறமையும், ஆழ்ந்த மதிநுட்பமும், தமது அரசியல், பொருளாதார, ராணுவ நிலைமையின் நுட்பத்தை நன்கு உணர்ந்தவர்களுமான பெரிய ராணுவ நூல் நிபுணர்கள்.

செம்படைகள் ஆரம்பத்திற் சில டஜன் கைத் துப்பாக்கிகளின் உதவியினாலேயே யுத்தத்தை ஆரம்பித்தன! மக்களின் மன உறுதியை அடிப்படையாகக்கொண்ட அவ்வியக்கம் வெள்ளைப் படையிலிருப்பவர்களிற் சிலரது எண்ணங்களையும் கவர்ந்தது. எதிரிகளோ ராணுவ முன்னேற்ப்பு வகையிற் வலியவர்களாய் தோன்றினும் எப்பொழுது வேண்டுமாயினும் திடீரென ஒன்று திரட்டும்படியான நிலைமையில் படை வலி பெற்றவர்களாயிருக்கவில்லை.

ஜப்பானியாரை எதிர்த்துச் செய்யப்படுகின்ற இந்த யுத்தத்தில் செம்படையினர்க்கு கோமிண்டாங் படையை எதிர்த்தபோது தமக்கிருந்ததை விடப் பல வழிகளிற் அதிக அநுகூலங்கள் தற்போது கிடைத்துக் கொண்டிருக்கின்றன.

ஜப்பானியர்கள் எளிதில் இவர்களது தளவாடங்களையும் ஆயுதச் சாலைகளையும் கவர்ந்து கொள்ள மாட்டார்கள். ஆனால் அவர்களிடமிருக்கும் ஆயுதங்களில் பலவற்றை செம்படையினர் கவர்ந்து கொள்ளவர்கள் என்பது திண்ணம். கோமிண்டாங் படையிலிருந்து கைப்பற்றிய துப்பாக்கிகளே செம்படையினர் வசம் தற்போது இருக்கின்றன. ஒன்பது வருடகாலம் கோமிண்டாங் படையினர் செம்படையினர்க்கு ஆயுதம் சுமப்பவர்களாயிருந்தார்களென்று 'மாவ்' கூறுகிறார். எனவே ஜப்பான் தேசம் முழுதும் திரண்டுவிடுமாயின் தமக்குக் கிடைக்கும் சக்திக்கு அளவில்லை என்றும் ஜப்பானால் ஒன்றும் செய்ய இயலாதென்றும் கூறுகிறார்.

சீனாவில் யுத்த அரங்கங்கள் அதி விசாலமானது. எனவே இயந்திர வண்டிகளை மிகுந்த வேகத்துடனும் வெற்றியுடனும் செலுத்திப் போரிடுவ

* (நாங்கில் சீனாவைச் சேர்ந்த சைன்யங்கள், இவை சன்—யட்—சேனைப் பின்பற்றின வீரர்களாலாகியவை).

தற்குரிய சக்தி அங்கே நன்ருய் வாய்த்திருக்கிறது எனலாம். ஆதலால் மெல்ல நகரும் ஜப்பானியரின் யுத்தக் கருவிகளை அழித்துவிடலாம். தவிர பகைவர்கள் தம்மைப் பின்புறமாய்த் திடீரென்று தாக்கிவிடாமலிருப்பதற்கும் வழி தேடிக்கொள்ளலாம்.

ஆதலால் ஒன்றிரண்டு முக்கிய ஸ்தலங்களில் தமது முழு கவனத்தையும் செலுத்தி, யுத்தம் செய்வதாயின், நாட்டின் இயற்கை அமைப்பு, பொருளாதாரம் ஆகியவற்றிலிருந்து பெறும் நன்மைகளனைத்தையும் இழந்து, அபிஸீனியர் பட்ட பாட்டை தாமும் அனுபவிக்க நேரிடும். ஆதலால் யுத்த ஆரம்பத்திலேயே வெற்றி தோல்விகளைக் குறிப்பிடும் பெருஞ் சண்டைகட்கு இடங்கொடுத்துவிடலாகாது. ஆனல் பகைவரின் யுத்த உணர்ச்சியையும், ராணுவ சக்தியையும், ஊக்கத்தையும் நாளடைவில் அழிப்பதற்கான சூழ்ச்சிகளையே நாம் கையாண்டு வரவேண்டும்.

அபிஸீனியர்கள் தமது உள் நாட்டு அரசியல் குழப்ப மோருபுறமிருக்க, ஓரேயிடத்தில் தீவிரமாய்த் தமது முழுச் சக்தியையும் செலுத்திப் போராடியதன் பயனுவே, பாஸிஸ அரக்கர்களின், நவீன யுத்த ஆயுதங்கட்கு இரையாகி மடிந்தனர்.

### விவசாயிகள் படை

சாதாரண சினப் படைகளுடன் விவசாயிகள் படைகளையும் இனி சிருஷ்டிக்கவேண்டும். அவை ஓரேவித நோக்கமும், ராணுவ முஸ்தீப்புக்களையுமுடையனவாயிருக்கும். மஞ்சூரியாவில் ஜப்பானை எதிர்த்து வந்த தொண்டர் படைகளைப் போலவே இப்படைகளும் மக்களின் சக்தியைத் திரட்டிப் பெருக்கிவரும். மஞ்சூரியாவில் மக்கள் காட்டிய ஜனசக்தி புரட்சி மனப்பான்மை வாய்ந்த சீன மக்கட் சக்தியின் ஓர்சிறு அம்சமேயாகும். திறமையான கட்டுப்பாடுகளுடன் ஒழுங்காக அமைக்கப்பட்ட அத்தகைய படைகள் தினம் 24 மணி நேரம் வரையிலும், ஓய்வு கொடாமலே ஜப்பானியரை அலக்கழித்துவிடலாம்.

யுத்தம் சீனவில்தான் நடைபெறப் போகிற தென்பதை மறந்துவிடலாகாது. எனவே ஜப்பானியர் முற்றிலும் தமது பகைவர்களாலேயே சூழப்பட்டிருப்பர். அதோடு தமக்குரிய உணவுப் பொருள்கள் அனைத்தையும் கூடியவளவு விரைவாக நாட்டிற்குள் புகுத்திவிட்டு, போக்குவரத்துக்குரிய பாதைகளைக் காப்பு செய்ய முனைந்து விடுவார்கள்.

யுத்தம் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போதே ஜப்பானியரிற் பலர் சீனரால் சிறையாக்கப்படுவர். அவர்களது யுத்தத் தளவாடங்கள் பெருவாரியாகச் சீனர்களால் கவரப்பட்டுவிடும். சிலநாட்களுக்குப் பின்னர் கோட்டைகள், தடுப்புகள், கிடங்குகள், ஆகியவற்றின் துணையால் போராட்டத்தைத் தொடர்ந்து செல்லும் நிலைமை ஏற்பட்டு விடும். அதற்குள் சீனரும் நவீனயுத்தக் கருவிகள் பலவற்றையும் முக்கியமான தம் நேச தேசத்தாரிடமிருந்து பெற்றுக் கொள்வார்கள்.

### பொருளாதாரச் சீர்குலைவு

சீனவுக்குள் இருந்துகொண்டே தனது நிலைமையை நீண்டகாலம் காப்பாற்ற ஜப்பானுக்கு ஏராளமான பொருட் செலவாகும். முடிவைத் தீர்மானிக்காத பல சிறு சண்டைகளால் போர் வீரர்களின் உணர்ச்சியில் எதிரிடையான மாறுதல் உண்டாகிவிடும். ஜப்பானிய ஏகாதிபத்தியப் பேரலைகள் சீனர் எதிர்ப்புளனும் பாறையின்மீது மோதிச் சிதறுண்டு போம் விரையிலும், இறைக்க இறைக்கக் குறையாது ஊற்றெடுக்கும் அணைக்கட்டுபோன்ற சீன மக்கட் சமூகம் தங்கள் சுதந்திரத்தை நிலைநாட்டுவதற்காக மக்களைப் போர்முனைக்கு அனுப்பிக் கொண்டேயிருப்பார்கள். இதன் பயனக சீனர்கள் ஜப்பானியரைக் கண்ட கண்ட இடங்கள் எங்கும் வென்று அவர்களை நாட்டைவிட்டு விரட்டும்படியான நிலைமையை உண்டுபண்ணி விடுவார்கள் என்பதற்குச் சந்தேகமேயில்லை.

நாளிது வரையிலும் ஜப்பான் பெற்றுள்ள முன்னேற்றத்தைப் பார்க்கும்போது மேற்குறித்த அனுமானங்களின் உண்மை புலனுகாமற் போகாது. தான் எதிர்பார்த்திருந்ததைப்போல் ஜப்பான் வெற்றியடைந்து விடவில்லை. ஜப்பான் படைகள் 1250 மைல்கள் முன்னேறி விட்டாலும் பயனுவதொன்றுமில்லை.

### பொது உடைமைக்காரரின் ஆதரவு

சீனச் செம்படையினர் பெறும் விலை மதிக்கவாண்ணப் பொருள் அபேதவாத நாட்டினரால் அவர்கட்கு அளிக்கப்பட்டுவரும் ஊக்கமேயாகும். புரட்சி மனப்பான்மையுடைய ஜனநாயக உணர்ச்சி ததும்பும் முறையில் செம்படையினர் சேனுதிபதியாகிய ‘பெங்’ சொல்வதை நோக்குக.

“மக்களிற் பெரும்பான்மையோர் நம்மை ஆதரிக்கவில்லையேனில் இங்கு நாம் நிலைபெறுதல் அரிது. நாங்கள் பகைவர்களைத் தாக்கிக் கொண்டிருக்கும் போது ஜனங்களின் முஸ்டிகளே தவிர வேறேவருமில்லை.” என்கிருர்.

செம்படைத் தலைவர்கள் ஒருக்கால் சாதாரண உழைப்பாளிகளாயும் விவசாயிகளாயும், மாணவர்களாயும் வாழ்க்கை நடத்தியவர்களேயாவர். அவர்களைப் பார்ப்போருக்கு அன்னவரின் பயிற்சியும், உற்சாக மிக்க மனித உள்ளமும், ஆண்மையும், சத்தியமும், சர்வதேசப் பற்றும் விளங்காமற்போகாது.

செம்படையினர் 1934-ல் தெற்குச் சீனமீது (கோமின்டன்) படையெடுத்துச் சென்று ஷென்ஸியை அடைவதற்கு ஒரு வருடகாலம் ஆயிற்று. பன்னிரண்டு மாகாணங்களின் வழியாகத் தீவிரமாய் போராடிக்கொண்டே 6000 மைல் தூரம் சென்ருர்கள். அவர்கள் பட்ட துன்பம் சொல்லுந்தரமன்று. இவர்களா ஜப்பானியரால் வெல்லப்படுவார்கள்.





## கடன் பத்திரங்களும் பங்குகளும்

(ட்ரோஜன் கம்பெனியாரிடமிருந்து)

சென்னை, அக். 26.

| சர்க்கார் கடன் பத்திரங்கள் :— | வாங்கும் விலை | விற்கும் விலை |
|---|---|---|
| | ரூ. அ. | ரூ. அ. |
| 2¾ % புதிய கடன் 1948-52 (வரியுள்ளது) | 100—3 | 100—5 |
| 3 „ 1941 (வரியுள்ளது) | 103-11 | 103-13 |
| 3 „ 1951-54 , | 102—4 | 102—6 |
| 3 „ ஜி. பி. நோட்ஸ் „ | 89—4 | 89—6 |
| 3½ „ „ „ | 98—6 | 98—8 |
| 3½ „ 1947-50 „ | 106—6 | 106—8 |
| 4 „ 1943 „ | 108-10 | 108-12 |
| 4 „ 1960-70 „ | 113-12 | 113-14 |
| 4½ „ 1955-60 , | 119-10 | 119-12 |
| 5 „ 1939-44 „ | 105—3 | 105—5 |
| 5 „ 1940-43 „ | 108—6 | 108—8 |
| 5 „ 1945-55 (வரியில்லாதது) | 120-10 | 120-12 |
| 5½ „ 1938-40 (வரியுள்ளது) | 103—1 | 103—3 |
| 3 „ 1956-61 மைசூர் (வரியில்லாதது) | 100-14 | 101—2 |
| 3½ „ 1951-58 „ „ | 106—2 | 106—6 |
| 4 „ 1953-63 „ „ | 111—7 | 111-11 |
| 5 „ 1955 „ „ | 123—6 | 123-10 |
| 5½ „ 1938 „ „ | 113—2 | 113—6 |
| 6½ „ 1940 „ „ | 109—4 | 109—8 |
| 6½ „ 1941-51 „ „ | 114—7 | 114-11 |
| 3½ „ 1956-61 கொச்சின் „ | 102— | 102—8 |
| 5 „ 1943-53 கொச்சின் | 110-12 | 110—4 |
| 3 „ 1956 திருவாங்கூர் | 102-14 | 103—6 |

| பாங்கி:— | | | ரூ. |
|---|---|---|---|
| ரிஸர்வ் | பாங்க் | | 124/ |
| இம்பீரியல் | „ | F. P. | 1560/ |
| „ | „ | P. P. | 383 |
| இந்தியன் | பாங்க் | (Big) | 125/8 |
| „ | „ | (Small) | 25/12 |
| வெண்டிரல் | „ | | 31/ |

வெள்ளி:—(சென்னை)

தங்கம்—(சென்னை)

ப்ரோச் பஞ்சு—(பம்பாய்)

ஜனவரி—ஆகஸ்டு.

## ரயில் போக்கு வரவு

### மதராஸ்-எழும்பூர்

மெயின் லைன்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இன்டோ-ஸிலோன் | மாலை | காலை |
| எக்ஸ்பிரஸ் .... | 9 0 | 6 35 |
| செங்கோட்டை .... | காலை | மாலை |
| பாஸஞ்சர் .... | 7 30 | 7 00 |
| | மாலை | காலை |
| கடலூர் பாஸஞ்சர் .... | 4 00 | 10 55 |
| திருவனந்தபுரம் | மாலை | காலை |
| பாண்டு பாஸஞ்சர்.... | 9 30 | 6 00 |
| | மாலை | காலை |
| திருச்சி பார்சல் .... | 10 25 | 5 15 |
| **கார்டு லைன்** | | |
| தனுஷ்கோடி பாண்டு | காலை | மாலை |
| பாஸஞ்சர் .... | 11 35 | 2 40 |
| திருவனந்தபுரம் எக்ஸ் | மாலை | காலை |
| பிரஸ் .... | 8 5 | 7 15 |

### மதராஸ்—சென்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| | மாலை | காலை |
| கல்கத்தா மெயில் | 8 30 | 8 00 |
| கிராண்டு டிரங்க் | காலை | மாலை |
| எக்ஸ்பிரஸ் .... | 7 55 | 5 10 |
| | மாலை | காலை |
| பம்பாய் மெயில் | 9 00 | 5 55 |
| | காலை | மாலை |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | 8 45 | 4 55 |
| | மாலை | காலை |
| பங்களூர் மெயில் .... | 9 30 | 6 10 |
| | மாலை | காலை |
| „ எக்ஸ்பிரஸ் .... | 1 0 | 2 09 |
| | காலை | மாலை |
| „ பாஸஞ்சர் .... | 6 30 | 7 45 |
| | மாலை | காலை |
| „ „ .... | 9 40 | 5 20 |
| ஜோலார்ப்பேட்டை | மாலை | காலை |
| பாஸஞ்சர் .... | 1 5 | 1 45 |
| அரக்கோணம் | மாலை | காலை |
| பாஸஞ்சர் .... | 6 30 | — |
| காட்பாடி பாஸஞ்சர் .... | 5 30 | 9 45 |
| | | காலை |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | 7 20 |
| புது மெளண்டன் | | |
| எக்ஸ்பிரஸ் .... | 9 25 | 5 20 |

# விலைவாசிகள்

## வட்டி விகிதம்

### ரெங்கூன் நடப்பு வட்டி

| | | | | |
|---|---|---|---|---|
| ஈஸ்வர சித்திரை வட்டி | ரூ. | 0 | 4 | 0 |
| ,, வைகாசி ,, | ரூ. | 0 | 4 | 0 |
| ,, ஆனி ,, | ரூ. | 0 | 4 | 0 |
| ,, ஆடி ,, | ரூ. | 0 | 4 | 0 |
| ,, ஆவணி ,, | ரூ. | 0 | 4 | 0 |
| ,, புரட்டாசி ,, | ரூ. | 0 | 4 | 0 |
| ,, ஐப்பசி ,, | ரூ. | 0 | 4 | 0 |

### மதராஸ் நடப்பு வட்டி

| | | | | |
|---|---|---|---|---|
| ஈஸ்வர சித்திரை வட்டி | ரூ. | 0 | 7 | 0 |
| ,, வைகாசி ,, | ரூ. | 0 | 6 | 6 |
| ,, ஆனி ,, | ரூ. | 0 | 6 | 6 |
| ,, ஆடி ,, | ரூ. | 0 | 6 | 3 |
| ,, ஆவணி ,, | ரூ. | 0 | 6 | 0 |
| ,, புரட்டாசி ,, | ரூ. | 0 | 5 | 6 |
| ,, ஐப்பசி ,, | ரூ. | 0 | 5 | 6 |

### செய்கோன்

4—10—37

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர ஆவணி நடப்பு வட்டி, | 0 | 4 | 0 |
| ,, ,, தவணை வட்டி | 0 | 4 | 0 |

நெல் விலை பிக்கல் 1-க்கு 4$20லிருந்து 4$25 வரை.

உண்டியல் விலை இந்தியாவுக்கு செய்கோன் ரிங்கி 100-க்கு ரூபா. 84-1/4.

சிங்கப்பூருக்கு............ செய்கோன் ரிங்கி 100க்கு மலாயா ரிங்கி 54 1/4.

### பினாங்கு

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர புரட். நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| ,, ,, தவணை வட்டி | 0 | 3 | 6 |
| உண்டியல் | 155 | | |

### சிங்கப்பூர்

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர புரட். நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| ,, ,, 1உ தவணை ,, | 0 | 3 | 6 |
| ,, புரட். 16உ ,, | 0 | 3 | 6 |

## தங்கம், வெள்ளி

சென்னை, நவம். 9உ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத் தங்கம் | 34 | 7 | 9 |
| ஷை வாய்தா | 34 | 9 | 3 |
| மூணா தோலா 1-க்கு | 34 | 1 | 9 |
| சவரன் மொத்தம் | 22 | 4 | 9 |
| சவரன் சில்லறை | 22 | 5 | 3 |
| வெள்ளி ரூ. 100 எடை | 50 | 14 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 6 |

### வட்டி

ரிசர்வ் பாங்க் வட்டி:—3 பெர்செண்டு

இங்கிலாந்து பாங்க் வட்டி:—2 பெர் [செண்டு

### சிங்கப்பூர் மார்க்கெட்

அக். 20, சிங்கப்பூர்.

| | | |
|---|---|---|
| ரப்பர் ராத்தல் 1-க்கு | செண்டு | 24 5/8 |
| சயம் பிக்கல் ,, | $ | 107-00 |
| சவரன் | | 14-45 |
| வெள்ளிக்கட்டி | | 20 |
| கொப்ரா (உலர்ந்தது) | | 5-50 |
| கொப்ரா (கலவை) | | 5-25 |

### நாட்டரசன்கோட்டை

#### பாரதி வாசகசாலை

இன்று கூடிய நிர்வாகக் கூட்டத்தில், காரியதரிசி திரு. சோம. லட்சுமணன் செட்டியாரவர்களின் ராஜிநாமா அங்கீகரிக்கப்பட்டு ஷை பதவிக்கு சுப. மு. கண்ணப்ப செட்டியாரவர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் என உதவிக் காரியதரிசி அறிவிக்கிறார்.

## கப்பல்

### சென்னையிலிருந்து

#### ரங்கூன்

எத்தோபியா:— நவம். 12-ந் தேதி புறப்படும்.

ஸ்கான்பெல்ஸ்:—தேதி அறிவிக்கப்படவில்லை.

### மலாயா—சென்னை

ரோணு:—நவம். 13-ந் தேதி வந்து 16-ந் தேதி புறப்படும்.

ரஜுலா:—நவம். 27-ந் தேதி வந்து 30-ந் தேதி புறப்படும்.

### நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்கு

| | |
|---|---|
| ரோணு | 20—11—37 |
| ரஜுலா | 4—12—37 |

### மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு

| | |
|---|---|
| ரஜுலா | 25—11—37 |
| ரோணு | 9—12—37 |

### மதராசிலிருந்து சிங்கப்பூர் செய்கோனுக்கு புறப்படும் கப்பல்கள்

(வி. கே. அய்யர் அறிவிக்கிறார்)

| | |
|---|---|
| ஃவின்ச் | 23—11—37 |



# இது தெரியுமா?

### சோவியத் விமான நிலயம்

சோவியத் ருஷிய சர்க்கார் மாஸ்கோவினின்று பத்து மைல்களுக்கப்பால் ஒரு புதிய விமான நிலயம் கட்டப் போகிறார்கள். இதன் விஸ்தீரணம் 1,367 ஏக்ரா. இவ்விடத்தில் விமானப் பந்தயங்கள் நடத்தப்படுமாம். மூன்று லட்சம் மக்கள் வீற்றிருந்து பார்க்கும்படியான அளவிற்கு இருக்கைகள் அமைக்கப்படும். இதற்குள் 15,000 மோட்டார்கள் நிறுத்துவதற்குரிய வசதிகளிருக்குமாம்.

### 'போனில்' இனி பேசுவோரையுங் காணலாம்

பிரிட்டிஷ் போஸ்ட் ஆபீஸ் அதிகாரிகள் அடுத்த வருடத்தில் டெலிபோன் உடன் 'டெலிவிஷனும்' அமைக்கப் போகிறார்களாம். ஆரம்பத்தில் இது பரீக்ஷார்த்தமாகவே செய்யப்படும். பொதுமக்களின் உபயோகத்திற்கு விடப்படமாட்டா.

ஜெர்மனியில் 'போன் டெலிவிஷன்' நடைமுறையில் வந்துவிட்டது. இதன் விசேஷம் என்னவெனின், இந்நூதன முறையால் பேசுபவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளக் கூடும். பெர்லினில் 3 மினிட் நேரம் பேசுதற்கு 3 மார்க்குகள் செலுத்தப்பட வேண்டும்.

போனில் இணைக்கப்பட்டிருக்கும் 'ஸ்கிரீன்' எட்டு அங்குலம் அகலமாயிருக்கிறது. இது பேசுவரின் வடிவத்தைத் தெளிவாய்க் காட்டவல்லது.

### வேதனை கொல்லும் புதுமுறை

சத்திர சிகிச்சை செய்வதற்கு முன் 'க்ளோரோபாரம்' கொடுத்து அறிவை மயங்கவைக்கும் முறை ருஷியாவில் மாற்றப்பட்டு விட்டது. தற்போது மின்சாரக் கரண்டினால் நரம்புகளின் உணர்ச்சியைப் போக்கி சத்திரப் பிரயோகம் பண்ணுகிறார்கள்.

ஆரம்பத்தில் சில முயல்களின்மீது இம்முறை பிரயோகித்து பரிசோதிக்கப்பட்டது. இம்முறையால் நல்ல பலன் ஏற்பட்டிருக்கிறது. கரண்டை நிறுத்திவிட்ட பிறகு, நோயாளி ஓர் வித வேதனையும் உணர்வதில்லையாம்.

### மின்சார வேலியமைப்பு

அமெரிக்காவின் தோட்டங்களில் தற்போது முட் கம்பிகட்டும் மரவேலிகட்குப் பதிலாக, மின்சாரத் தந்திகளை உபயோகப்படுத்தி வருகின்றார்களாம். சன்று காலிகள் இவ்வேலிகளுக் கருகாமையில் சென்றதும் 90 வோல்ட் சக்தியுடன் 'ஷாக்' அடிகிறதாம். எனவே ஆடுமாடுகள் அவற்றிற்கருகே செல்லாமல் வேறிடஞ் சென்று விடுகின்றன.

### பெட்ரோல் இன்றி ஓடும் கார்!

பெட்ரோலின் உதவியில்லாமலே காரை செலுத்துவதற்குப் பிரெஞ்சு, ஜர்மன் நிபுணர்கள் முயன்று தமது உழைப்பில் வெற்றி பெற்றிருக்கிறார்கள். 'பெட்ரோல் டாங்கு'களில் மரப்பொடியை நிரப்பி அதில் நெருப்பு மூட்டிவிட்டால் அதிலிருந்து ஓர்வகை 'காஸ்' உண்டாகிறது. இந்த காஸின் உதவியால் கார் ஓட்டப்படுகிறது.

ஜர்மானியர், சாக்கடையிற் செல்லும் அசுத்தங்கள் அனைத்தையும் சேகரித்து அதிலிருந்து ஓர் வகையான 'காஸ்' உண்டாக்குகிறார்கள். அதனைப் பெரிய டாங்குகளில் அடைத்து வைத்துக்கொண்டு கார்களுக்கு உபயோகித்து வருகிறார்கள். இந்தக் காஸின் உதவியால் மணிக்கு அறுபது மைல் தூரம் செல்லும் வேகத்தை உண்டுபண்ணக் கூடுமென ஜர்மானிய விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

யுத்தகாலங்களில் பெட்ரோலுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டுவிடலாகாதென்ற எச்சரிக்கையுடனேயே இந்நூதன முறை கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது.

### ரண சிகிச்சையின் அற்புதங்கள்

டாக்டர் வார்ட் ஹால்டெட் (சிகாகோ)என்பவர் ஓர் சிறுமியாரியின் மூளையில் முளைத்தெழுந்த ஓர் கட்டியை ஆபரேஷன் செய்யுங்கால் அம்மனிதனது மூளையின் முக்கால் பாகத்தை வெளியே எடுத்து அகற்றிவிட நேர்ந்தது. உடனே நோயாளி பைத்தியங் கொண்டான். ஆனால் சில நாட்களில் குணமடைந்து அவன் தொழிலை தீவிரமாய் நடத்தவாரம்பித்தான். இன்றைக்கு அமெரிக்காவில் ஓர் பெரும் பிரபுவாய் வாழ்கிறான்.

1933-ல் லண்டன் தெருவில் சமாசாரப் பத்திரிகை விற்றுக்கொண்டிருந்த ஒரு பையன் ஒரு வண்டியால் மோதப்பட்டுக் கீழே விழுந்தான். பரிசோதனைக்குப் பிறகு அவனது ஈரல் துண்டிக்கப்பட்டதாக தெரிந்தது. ஆபரேஷன் செய்து இரத்த ஒழுக்கு தடைப்படுத்தப்பட்டது. ஆனால் அவ்வேழைப் பையன்பிழைக்கவில்லை. இந்த சிகிச்சையில் டாக்டர்கள் புரிந்த அற்புதம் என்னவெனில் ஈரலினால் பயன்படுத்தப் படாமல் விடப்பெற்ற இரத்தத்தைப் பாழாக்காமல், மீண்டும் சரீரத்துக்குள் அதை ஓடும்படிச் செய்ததேயாகும். இந்த நிலைமையில் அச்சிறுவன் 30 மணி நேரம் உயிர் பிழைத்திருந்தது அதிசயமேயன்றோ!

ஒருவன் தொண்டையில் குரலெழுப்பும் முக்கிய உறுப்பாகிய கண்டத்தை டாக்டர் வில்லியம் வாலஸ் என்பவர் ஆபரேஷன் செய்து அகற்றிவிட்டார். இதனால் அவ்வேழை ஊமையாகவன்றோ மாறியிருத்தல் வேண்டும்? செயற்கையான முறையில் குரல் வளையை செய்துவைக்கவும் அவன் விரும்பவில்லை. தினந்தோறும் தொண்டையிலுள்ள நரம்புகட்குப் பயிற்சியளிக்கும் முறையில் காற்றை உள்வாங்கவும் வெளியே விடவும் பயின்று வந்தான். இதன் பயனாக இரண்டு வாரங்கட்குள் அம்மனிதன் பேசும் சக்தியைப் பெற்றுக் கொண்டான். குரல் முன்னிருந்ததை விட ஒரு சிறிது தான் மாற்றமடைந்திருந்தது.

### குழந்தையின் வயிற்றில் தவளை

மந்துவா எனுமிடத்தில் ஓர் சிறு குழந்தை வாந்தி எடுத்தது. அது போது ஓர் உயிருள்ள தவளை வெளியே வந்து வீழ்ந்ததாம். காரணம், சென்ற கோடையில் அக்குழந்தை தவளை முட்டைகளிருந்த குளத் தண்ணீரைப் பருகியதாம்.

### பூகம்பம்

ஜப்பானில் வருடந்தோறும் 50 பூகம்பங்கள் உண்டாகின்றனவாம். அவற்றோடு 70,000 சிறு அதிர்ச்சிகளும் தோன்றுகின்றனவாம். 1896-ல் டங்கரோரா எனுமிடத்தில் உண்டான பூகம்பத்தின் பயனாக எழுந்த கடற் கொந்தளிப்பால் 20,000 உயிர்களும், 2,000 கட்டிடங்களும் அழிந்து போயின.

---

### ரூ 9,16,073 லட்சம்

### 1936-ல் சென்னை மாகாணக் கதர் உற்பத்தி

1936-ல் சென்னை மாகாணத்தில் (தமிழ் நாடு, ஆந்திரா, கேரளம்) ரூ.9,16,073 ரூபாய் விலை மதிப்புள்ள 2,059,835 சதுரகஜம் துணி உற்பத்தி செய்யப்பட்டது. இவ்வருடத்தில் விற்பனை 10,03,365. இவ்வேலை 2,320 கிராமங்களில் 36,648 நூற்பவர்களாலும் 2,830 நெசவாளிகளாலும் நடைபெற்றது. அவர்கட்கு முறையே 3,64,873 ரூ. நூற்புக் கூலியாகவும் ரூ. 1,90,46 நெசவுக் கூலியாகவும் தரப்பட்டது. இவர்களில் பெரும்பாலோர் ஒழிந்த நேரங்களில் வேலை செய்தவர்கள். இவர்களைத் தவிர பஞ்சு கொட்டுவோர், அச்சு, சாயமிடுவோர், வெளுப்போர் முதலிய 265 பேர்கள் ரூ. 29,849 கூலியாகப் பெற்றிருக்கிறார்கள். அகில பாரத சர்க்கா சங்கத்தால் இம்மாகாணத்தில் போடப்பட்டுள்ள மூலதனம் ரூ.7,89,151. இதில் 1936 வருட இறுதியில் ரூ. 5.75,647 பெறுமானமுள்ள சரக்குகள் இருப்பிலிருந்தன.

---

# மதுவிலக்கில் பெண்கள் தலையீடு

## பீஹாரில் சட்டத் துணையின்றி மதுவரக்கனை வீழ்த்த உறுதி

பாட்னாவுக்குச் சமீபத்திலிருக்கும் டிக்கா தானாவைச் சேர்ந்த ஸ்ரீ நாராயண்ஜீ (சதாகூவத் ஆச்ரமம்) சட்டத்தின் துணையும் அரசாங்க ஆதரவுமின்றி மது விலக்குத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க முயன்று வருகிறார்.

17 கிராமங்களைக் கொண்ட இத்தானாவில் 3000 குடிகாரர்கள் இருக்கிறார்களாம். அதில் 1500 பேர் 30-க்குக் கீழானவர்கள்; 1000 பேர் 30 மேற்பட்டவர்கள்; 500 பேர் 50-க்கு மேற்பட்டவர்களாவர். இதில் முதல் வகையினர் ஆரம்பர்கள். எனவே இவர்களை எளிதில் தடுத்து விடலாம். இரண்டாவது வகையினர் பழக்கத்துக்கு இரையானவர்கள். இவர்களை வழிக்குக் கொண்டு வருதலே சிரமமாகையால் அந்தந்தக் குடிகாரர்களின் குடும்பங்களிலிருந்து பெண் தொண்டர்கள் திரட்டப்படுவார்கள். மூன்றுவது வகுப்பினரைச் சீர்திருத்த நீண்டநாட்கள் ஆகும்.

### பிரசார முறைகள்

1. மதுவிலக்கு ஊர்வலங்கள் நாடோறும் நடத்தல்.

2. காந்திஜீ முதலான பல தலைவர்களின் கருத்துக்களடங்கின அறிக்கைகளை விளம்பரம் செய்தல்.

3. கிராம வாசிகட்கு, குடிப்பழக்கத் தீமைகளை விவரிக்கும் திரைப்பட காட்சிகள் அளித்தல்.

4. கூட்டங்கள் கூட்டுவித்தல். கிராமப் பஞ்சாயத்து அமைப்புகளின் மூலம் பிடிவாதத் தன்மையுடனிருப்பவரை வற்புறுத்துதல்.

இதற்கெனத் தொண்டர்கள் பயிற்சியளிக்கப் படுவார்கள். ஒவ்வொரு தொண்டனிடமும் குடிகாரர்கள் ஜாபிதா ஒன்று இருந்துவரும். அதன் மூலம் தொண்டர்கள் குடிகாரர்களை கவனித்து வர வேண்டும். இவ்வேலைத் திட்டத்தின்படி வேலை ஒழுங்காய் நடைபெறுமெனில் ஒரு வருடத்துக்குள், சத விகிதம் மக்கள் குடிப் பழக்கத்தை விட்டு விடுவார்கள். இத் திட்டத்திற்கு ரூ 600 செலவாக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது. பாபு ராஜேந்திரர் இதற்கு ரூ 100, நன்கொடை யளித்திருக்கிறார். தொண்டர்களிற் சிலர் ஏற்கனவே வேலை தொடங்கி விட்டனர்.

---

### ஆஸ்பத்திரி நன்கொடை

வட இராமநாதபுரம் ஜில்லா போர்டுக்கு இராநாதபுரம் சா. அ. குடும்பத்தினர் லட்ச ரூபாய் மதிப்புள்ள ஒரு ஆஸ்பத்திரியை நன்கொடையாக அளித்துள்ளார்கள். இதில் எல்லா வசதிகளும் அமைந்திருக்கின்றன; சமீபத்தில் இஃது திறந்து வைக்கப்பட்டது.

---

### கிராமக் கமிட்டிகள்

இதனடியில் கண்ட ஊர்களில் கிராமக் கமிட்டி அமைக்கப் பட்டிருக்கிறது என சிவகங்கை தாலுக்கா காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி தெரிவிக்கிறார்.

(1) ஊப்பூங்குடி.
(2) சோழபுரம்.
(3) இடையமேலூர்.
(4) கொல்லங்குடி.



### வலையபட்டி அனுமான் உடற்பயிற்சிக் கழகம்

இக்கழகத்தின் தீபாவளிப் போட்டிகள் ஏழாவது முறையாக நாளது ஐப்பசித் திங்கள் 17ம் நாள் பிற்பகல் 3-30 மணிக்கு வலையபட்டி டாக்டர் திரு. T. A. மங்களம் பிள்ளைவர்களின் தலைமையில் நடைபெற்றன.

அதிகப்பளுத் தூக்குதலில் முதலாவதாக வலையபட்டி மு. லெட்சுமணனும், இரண்டாவதாக ராம. அண. ராமநாதனும், மூன்றுவதாக. அ. பழ. உத்தமனும், வெற்றி பெற்றார்கள். உயரத் தாவுதல், கயிறு ஏறுதல், யோக ஆசனங்கள் முதலிய போட்டிகள் நடைபெற்றன.

வலையபட்டி சாண்டோ K. A. சோமசுந்தான் அவர்களால் அதிகப் பளுத் தூக்கியவர்கட்கு மூன்று மெடல்களும் செட்டிநாடு பயோனியர் பாங்க் மானேஜர், நாராயணன் நாயர் அவர்களாலும் KP. S. PR. பெரிய கருப்பஞ் செட்டியார் அவர்களாலும் சில பரிசுப் பொருள்களும் நன்கொடையாக அளிக்கப்பெற்றன.

பொன்னமராவதி சப் இன்பெக்டர் ஸ்ரீமான் ஜெயராம் முதலியாரவர்களால் பரிசுகள் வழங்கப்பட்டன.

---

### சிவஞான முனிவர் நூல் நிலையம்

#### இலவச வாசகசாலை திறப்பு

தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தின் சார்பில் நிகழும் ஐப்பசித் திங்கள் 25-ம் நாள் (10-11-37) புதன்கிழமை மாலை 6 மணிக்கு திருநெல்வேலி, கீழரதவீதி மேற்படி சங்கக் கட்டிடத்தின் கீழிடத்தில் கோயமுத்தூர் வழக்கறிஞர், சைவத் திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியார் B. A. அவர்களால் திறந்து வைக்கப்பெறும்.

(2) 6-30 மணிக்கு வெள்ளகால் ராவ்சாகிப் V. P. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் G. B, V. C. தெ. இ. தமிழ்ச் சங்கத் தலைவராயிருந்து காலஞ்சென்ற சர். இ. கெ. சிவஞானம்பிள்ளை அவர்கள் B. A. உருவப்படத்தைத் திறந்து வைப்பார்கள்.

(3) 7 மணிக்கு தெ. இ. தமிழ்ச் சங்கத் தலைவர் தென்காசி, திருவிதாங்கூர் ரிட்டையர்ட் ஜட்ஜ் திரு. T. S. குற்றாலிங்கம் பிள்ளையவர்கள் B. A., B. L. சைவசித்தாந்த சங்கத் தலைவராயிருந்துவரும் திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A. உருவப்படத்தை திறந்து வைப்பார்கள்.

உபந்நியாசங்களும் நடைபெறும்.

---

### அமராவதிபுதூர் வாலிபர் சங்கம்

#### பிரிவுபசாரக் கூட்டம்

ஈஸ்வர வருஷம் ஐப்பசி 6-ந் தேதி அன்று மாலை 6 மணிக்கு திரு. அ. வெ. சுப்ரமண்யன் அவர்கள் தலைமையில், அயல்நாடு செல்லும் திரு. நா. சுப்ரமண்யன் வெ. நாராயணன், காரியதரிசி, சுப. நாச்சியப்பன், அவர்களுக்கு பிரிவுபசாரக் கூட்டம் நடத்தப்பட்டது. முதலில் காசி சுப்ரமண்யன் அவர்கள் பிரிவுபசாரப் பத்திரங்களை வாசித்துக் கொடுத்தார்கள். பிறகு, இ. நாராயணன் அவர்கள் அன்பர்களை வாழ்த்தி, அவர்கள் சங்கத்தின் வளர்ச்சியில் பங்கெடுத்துக் கொண்டதையும், பாராட்டி இனியும் சங்கத்தின் வளர்ச்சிக்கு தங்களால் இயன்ற உதவி செய்யவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்கள்.

பிறகு, திரு. சுப. நாச்சியப்பன் அவர்கள், தான் எப்பொழுதும் சங்கத்தை மறக்க முடியாதென்றும், அதற்கு வேண்டிய உதவி செய்வதாகவும் வாக்களித்தார்கள். பிறகு, திரு. நா. சுப்ரமண்யன், வெ. நாராயணன் அவர்கள் தகுந்த முறையில் பதிலளித்த பிறகு தலைவர் முடிவுரை வாழ்த்துடன் இரவு 8 மணிக்கு கூட்டம் முடிந்தது.

---

### கல்லூரணி

#### கிராமக் காங்கிரஸ் 2-வது மகாநாடு

இன்று காலை 9 மணிக்கு இவ்வூர் கிராமக் காங்கிரஸ் கமிட்டி கூட்டம் நேரு வாசகசாலைக் கட்டிடத்தில் கமிட்டித் தலைவர் ஸ்ரீமான் வே. பெரியையா பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

அவ்வமயம் கல்லூரணி கிராமக் காங்கிரஸ் 2-வது அரசியல் மஹாநாட்டை நவம்பரீ முடிவிற்குள் நடத்தி முடிப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது.

மேற்படி மஹாநாட்டிற்கு கீழ்க்கண்டவர்கள் வரவேற்புக் கமிட்டியாராக தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

#### வரவேற்புக் கமிட்டியார் விவரம்

தலைவர் ஸ்ரீமான் வ. க. வ. அழகர்சாமி, காரியதரிசிகள் திரு. வ. சோ. வ சுந்தரராஜன் திரு. வ. க. ராம. கருப்பையா, பொக்கிஷதார், திரு. கு. க. முத்து, மெம்பர்கள்: மு. ரெத்தினம், க. சேவகப்பெருமாள் பிள்ளை, ஆர். வீரப்பத்திர பிள்ளை.

மஹாநாடு நடக்கும் தேதியும், மஹாநாட்டு தலைவர்கள் விபரமும் (அடுத்த) கமிட்டி மீட்டிங்கில் குறிப்பிடப்படும் என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

---

### கொத்தமங்கலம்

#### இளைஞர் பொதுநலக் கழகம்

30-10-37 மாலை 3 50 மணிக்கு தலைவர் A. பழனியப்பன் அவர்கள் தலைமையில் நடந்த கமிட்டிக் கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

1. கழக நூல் நிலையத்திற்கு சுமார் 150 புஸ்தகங்கள் வரை உதவிய திரு. ராமலக்ஷ்மணன் அவர்களையும் மற்றும் புத்தகம் உதவிய அன்பர்களையும் பாராட்டுவதாகத் தீர்மானிக்கப்பட்டது.

2. சமீபத்தில் நடக்க இருக்கும் கழக ஆண்டு விழாவிற்கு கீழ்க்கண்டவர்கள் அடங்கிய ஒரு வரவேற்புக் கமிட்டி நிறுவப்பெற்றது.

திருவாளர் பி. அருணாசலம் செட்டியார் அவர்கள்—தலைவர், ராம. நாராயணன் அவர்கள்—காரியதரிசி கெ. நாராயணசாமி அவர்கள்—உதவி காரியதரிசி A. பழனியப்பன்—பொக்கிஷதார்.

மற்றும் ஆறு அங்கத்தினர்களும் தொழிலாளர் சங்கப் பிரதிநிதி ஒருவரும் ஆக பதினொரு பேர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள் என மேற்படி கழகக் காரியதரிசி எழுதுகிறார்.

## சிங்கப்பூர்

### நாட்டுக்கோட்டை செட்டியார்களின் வர்த்தக சங்கம்

ஈஸ்வர வருடம் ஆவணி மாதம் 26-ந் தேதி 10—9—37 வெள்ளிக்கிழமை மாலை 5-10 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் ஏழாவது வருட எட்டாவது நிர்வாக சபைக் கூட்டம் தலைவர் திரு. பெரி. பெ. நா. நாச்சியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது.

#### கீழ்வரும் தீர்மானங்கள் நிறைவேறின

நாளது 14-8-37-ந் தேதி முதல் 10-9-37 வரையிலுள்ள கணக்குகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்று அங்கீகரிக்கப்பெற்றன.

ஏழாவது வருட ஏழாவது நிர்வாக சபைக் கூட்ட நிகழ்ச்சிகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்றன.

சு. முரு. கடையிலிருந்து வந்த பிரவேசப்பத்திரம் வாசித்துக் காண்பிக்கப்பெற்று மேற்படி கடையை நமது சங்கத்தின் அங்கத்தினராகப் பதிவு செய்து கொள்ளப்பெற்றது.

கோலாலம்பூர் ஆக்டிங் இந்தியா ஏஜெண்டிடமிருந்து புதிய இந்தியா ஏஜெண்டு மிஸ்டர் ஸி. எஸ். வெங்கடாச்சாரி, ஐ. ஸி. எஸ். அவர்களை வரவேற்கும் விஷயமாய் வந்த கடிதம் வாசித்துக் காண்பிக்கப்பெற்று இதர சங்கங்களோடு ஒத்துழைத்து கப்பலுக்குச் சென்று வரவேற்பதென தீர்மானிக்கப்பெற்றது.

மதராஸ் ஸி. இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் கடிதங்களைப் பரிசிலனை செய்து மேற்படி பாங்க் மானேஜருக்கு கடிதமும் மேற்படி டைரெக்டர் திரு. மு. சித. மு. சிதம்பரம்செட்டியாரவர்களுக்கு காப்பாண்டன்ஸ்களுக்கு நகலும் அனுப்பி கடிதமும் எழுதுவதென்று தீர்மானிக்கப்பெற்றது.

காரியதரிசியால் வந்தனோபசாரங் கூறப்பெற்று கூட்டம் இரவு 6–15 மணிக்கு முடிவெய்தியது.

## கொழும்பு

### தனவைசிய இளைஞர் சங்கம்

#### நான்காவது ஆண்டு நிறை விழா

தனவைசிய இளைஞர் சங்கத்தின் நான்காவதாண்டு நிறைவு விழா நேற்று 31—10—37 பிற்பகல் 4-30 மணி முதல் விமரிசையாக அலங்கரிக்கப்பெற்றிருந்த விவேகானந்த சபை மண்டபத்தில் ஸ்ரீலஸ்ரீ விபுலானந்த சுவாமிகள் தலைமையின் கீழ் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது.

விபுலானந்த சுவாமிகள் அவைத் தலைமை ஏற்றதும் மலர்மாலை அணிவிக்கப்பெற்று இறைவணக்கம் பாடப்பெற்றது. சென்ற ஆண்டு அறிக்கை காரியதரிசியால் வாசிக்கப் பெற்றதும், சபைத் தலைவர் முன்னுரை வழங்கினார். பல அறிஞர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

சபைத் தலைவர் சுவாமிஜீ அவர்கள் உபயாளர்களின் சொற்பொழிவுகள் பற்றித் தம் கருத்தை மிக ருசிகரமாக எடுத்துக்கூறினார்.

கீழ் வருபவர்கள்—புது வருட உத்தியோகஸ்தர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

தலைவர் திரு. K. ராமனாதனவர்கள், உப தலைவர் திரு. M. R. சேதுராமனவர்கள், காரியதரிசி திரு. S. P. ராமனாதனவர்கள், உப காரியதரிசி திரு. V. மாணிக்கவாசகனவர்கள்.



## பினாங்கு

### நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கம்

#### நான்காவது வருட ஐந்தாவது நிர்வாகசபைக்கூட்ட நிகழ்ச்சி

நிகழும் ஈஸ்வர வருடம் ஐப்பசி மாதம் 2-ந் தேதி 18-10-37 திங்கட்கிழமை மாலை 5-30 மணிக்கு ஷை கூட்டம் சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. க. அழ. ராம. அருணாசலம் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது.

நான்காவது வருட நான்காவது நிர்வாக சபைக் கூட்ட நடவடிக்கை விபரம் வாசித்துக் காண்பிக்கப் பெற்று, தலைவர் கையெழுத்து வாங்கப்பெற்றது.

ஈஸ்வர வருடம் புரட்டாசி மாதம் 1ந் தேதி முதல் 30ந் தேதி வரையிலுள்ள சங்க வரவு செலவு கணக்குகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்று, ஒப்புக்கொள்ளப்பெற்றன.

கோலாலம்பூர் மத்திய இந்திய சங்கத்திலிருந்து வந்த கடிதம் வாசித்துக் காண்பிக்கப் பெற்று, அதில் தற்சமயம் அங்கத்தினராக இருந்துவரும் திரு. க. வெ. ராம. அழகப்ப செட்டியாரவர்களே நம் பிரதிநிதியாக இருந்துவருவதெனத் தீர்மானிக்கப்பெற்றது.

குவீன் ஸ்டிரீட்டில் மாரியம்மன் கோவிலுக்கு எதிரிலுள்ள கசாப்புக் கடையை எடுத்து விடும்படி பினாங்கு எண்டோவ்மெண்ட் போர்டாருக்கு எழுதிய கடிதமும், அன்னவர்கள் கவனிப்பதாகத் தெரிவித்த பதிலும் வாசித்துக் காண்பிக்கப் பெற்று, ரிக்கார்டு செய்யப்பெற்றன. இன்னும் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### மகாபிஷேகம்

சஷ்டியப்த பூர்த்தி சாந்திக் கல்யாண வைபவமும் சதாபிஷேக வைபவமும் இரண்டும் பெற்ற இவ்வூர் க. தெ. நா. தெ. தேனப்பசெட்டியார் அவர்களுக்கு 23-10-37-ந் தேதியன்று மஹாபிஷேகம் மிக விமரிசையாய் ஆரம்பமாயிற்று. இவ்வைபவம் 3 நாட்கள் கொண்டாடப் பெற்றது.



## மதிப்புரை

### எம். என். ராய்

இது, மானவேந்திர ராய் என்றும் மிஸ்டர் மார்ட்டின் என்றும் அழைக்கப்படும் தோழர் நரேந்திரநாத பட்டாசார்யாவின் வாழ்க்கை வரலாறாகும். தோழர் பட்டாசார்யா (எம். என். ராய்) உலகிலுள்ள பெயர் போன புரட்சிக்காரர்களுள் ஒருவராக விருந்தும் அவரைப்பற்றி அதிகமாக எவருக்கும் விஷயம் தெரியவில்லை. அவரது வாழ்க்கை இந்தியாவோடு எவ்வளவு சம்பந்தம் பெற்றிருக்கிறதோ, அதைப்போல பன்னூறு மடங்கு வெளி நாடுகளில் சம்பந்தம் உற்றிருக்கிறது. மெக்சிகன் புரட்சி, அமெரிக்க தொழிலாளர் கிளர்ச்சி, பிலிப்பைன் புரட்சி, சீனப்புரட்சி, ஜெர்மன் எழுச்சி, ருஷ்ய புகழ்ச்சி முதலிய பல முக்கிய சம்பவங்களில் அவர் பங்கு பெற்றுள்ளவர். வங்காளத்திலுள்ள ஒரு கிராமத்தில் பிராமண குடும்பத்தில் ஒரு ஆசிரியரின் புதல்வனாய்ப்பிறந்த ராய் (பட்டாசார்யா) சிறு வயது முதல் ஏகாதிபத்யத்தின் மீது வெறுப்பும் பகையும் கொண்டு, சமதர்ம அரசியலை நிலைநாட்டக் கருதி, புரட்சி வேலைகளில் ஈடுபட்டார். வங்காளப் பிரிவினைக் காலத்தில் மார்ட்டின் என்ற பெயரோடு பட்டேவியா சென்று அங்குள்ள ஜெர்மன் கவர்னரின் உதவியால் ஆயிரக்கணக்கான துப்பாக்கிகளும் தோட்டாக்களும் கொணர்ந்து இந்தியா முழுதும் பெரும் புரட்சியை உண்டு பண்ணி ஆங்கில அரசாட்சியைக் கவிழ்த்த நினைத்தார்.

இந்தச் சதி பிரிட்டிஷ் ஒற்றர்கட்குத் தெரிந்துவிடவே திரு. பட்டாச்சாரியா சட்டத்தின் கொடுங்கைக்கு ஆளானார். அது முதல் பல சதிகளும் கொள்ளை வழக்குகளிலும் சம்பந்தப் படுத்தப்பட்டு சிறைக்கும் போலீஸ் தொல்லைக்கும் ஆளானார். அதன் மேல் பட்டேவியா சென்று அங்கிருந்து ஜெர்மனியை நாடி அங்குள்ள புரட்சி இயக்கங்களில் ஈடுபட்டார். அக்காலம் அவர் புகழ் மிகுந்துவிடவே அவர் பல நாடுகட்



தோழர் ராய்.

குச் சென்று பொதுவுடைமைப் புரட்சிகளைக் கிளப்பிவந்தார். கடைசியில் சீனப் புரட்சியின் தலைவர்களிலொருவரா யிருந்து கொண்டிருக்கும் போது அங்கு வந்திருந்த பரோடின் என்ற ருஷ்யப் பொதுவுடைமைத் தலைவருக்கும் ராய்க்கும் கடுமையான அபிப்பிராய வித்தியாசம் ஏற்பட்டது. இந்தத் தகராறில் ஸ்டாலின் தலையிட்டு ராயை மாஸ்கோவுக்குத் திரும்பிவிடுமாறு உத்தரவிட்டார். இதனால் ராய்க்கு மிகவும் வருத்தம். அதேபோது சீனப் புரட்சி தோல்வியுற்றுவிட்டது. இதனைப்பார்த்த தாம் ஸ்டாலினைக் கண்டித்து பிரசாரம் செய்யத் தொடங்கினர். அதனால் ஸ்டாலினுக்கும் ராய்க்கும் பகை முதிர்ந்தது. இதனால் ருஷ்யாவை விட்டு வெளியேற வேண்டியவரானார்.

அப்படியிருக்கத் திடீரென ராய் பம்பாயில் கைது செய்யப்பட்ட செய்தி பத்திரிகைகளில் வெளிவந்தது. அதனால் ஆச்சரிய மடைந்த உலகினர் ராய் பம்பாய் வந்துவிட்டதாக அறிந்தனர்.

இந்திய சர்க்கார் ஏற்கெனவே கான்பூர், மீரட் சதிகளில் தோழர் ராய் சம்பந்தப் பட்டதாகப் பதிவு செய்திருந்ததால் பம்பாய்க் கோர்ட்டில் விசாரித்து ஆறு வருடம் தண்டனை விதித்தனர்.

அதுபோது எழுந்த எதிர்ப்பு அபாரம். உலகப் பிரக்யாதிபெற்ற இன்ஸ்டீன் ராயை விடுதலை செய்யுமாறு வேண்டிக்கொண்டார். ஹம்பர்க் பட்டணத்திலுள்ள 20,000 தொழிலாளர்கள் ஒரு விண்ணப்ப மனுப்பி பிரிட்டிஷாரிடம் ராயின் விடுதலையைக் கோரினார்கள். சிகாகோ பட்டணத்து தொழிலாளிகள் 15 ஆயிரம் பேர் அவ்வாறே ஒரு விண்ணப்ப மனுப்பினர்.

இத்தகைய தோழர் ராயை பல வாசகர்கள் நன்கு தெரிந்து கொள்ளாமலிருப்பது வருந்தத்தக்கது. அக்குறையை நிவர்த்திக்கும் முறையில் ம. கி. திருவேங்கடம் என்பவர் தமிழில் சிறு புத்தகம் ஒன்று எழுதியிருக்கிறார். நல்ல தமிழில் அமைந்திருக்கிறது. விலை அணா 2 தான்.

54, சைபுள் முல்க் தெரு,
கோமளீஸ்வரன் பேட்டை,
சென்னை.

என்ற விலாசத்திற்கு எழுதி வேண்டிய காபிகளைப் பெற்றுக்கொள்ளலாம். தமிழில் ராயைப்பற்றி வெளிவந்த சரித்திரம் இதுதான். ஆகையால் தமிழர்கள் வாங்கிப்படித்துக் கொள்வது சாலும்.

### காந்திக் கீர்த்தனைகள்

இது, மகாத்மா காந்தியைப் புகழும் கீர்த்தனைகள் நிறைந்த ஒரு புத்தகம். சுமார் 25 பாட்டுகள் அடங்கியுள்ளன. கீர்த்தனை ஒவ்வொன்றும் முக்கியமான தெலுங்குக் கீதங்களின் மெட்டில் ஆக்கப்பட

விருக்கிறது; எனவே சங்கீதப் பிரியர்கள் விரும்பக்கூடும்.

இதன் ஆசிரியர் திருப்புகழ் திரு. சு. ஆவுடையப்ப தேசிகர். விலை அணா 3.

## 'வழிகாட்டும் வான்பொருள்'

'வழிகாட்டும் வான் பொருள்' எனும் இந்நூல் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளது சரிதமாகும். இதனைத் தமிழ் உலகிற்குத் தந்துதவியவர் கி. இராமலிங்க முதலியார் அவர்கள் பி. ஏ. இந்நூற்கண் மிளிரும் இனிமையும் எளிமையும் வாய்ந்த உரைநடை படிப்போர் உள்ளத்தைக் கவர்ந்து சுவாமிகள் வரலாற்றை முற்றிலும் படித்து மகிழச் செய்யும் ஆற்றலுடையது. "ஊன் நோக்கும் இன்பம் வேண்டாது', ஆண்டவன் அருள் நோக்கும் இன்பம் வேண்டி நின்றார்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள கோவில்பட்டியிலிருந்து சுமார் 28 மைல்களுக்கப்பாலிருக்கும் இரெட்டியப்பட்டி எனும் கிராமத்தில் சுவாமிகள் தோன்றினர். கொல்லம், 1032-ம் வருஷம் புரட்டாசித்திங்கள் 2-ம் நாள் சுவாமிகள் ஒரு சைவ வேளாளக் குடும்பத்தில் அவதரித்தார். தந்தையார் பெயர் வீரபத்திரப் பிள்ளை. தாயார் திருப்பெயர் ஆவுடையம்மை. பரம்பரையாகவே பராசக்திக்குப் பணிசெய்யும் பெருமை வாய்ந்திருந்தபடியால் ஊரார் அனைவரும் அக்குடும்பத்தைப் பெரிதாய் மதித்து வந்தனர்.

சுவாமிகளின் குழந்தைப் பருவம் பார்ப்பவர் உள்ளத்தைக் கவர்வதாயிருந்தது. பெற்றோர் குழந்தைக்கு 'சுப்பிரமணியம்' என்ற நாமம் சூட்டினர். சுவாமிகள் மூன்று வயதாயிருக்கும்போதே பிள்ளையாரை பக்தியுடன் பூசிப்பதும், அருச்சிப்பதும், அவர் முன் ஆனந்தக் கூத்தாடுவதும், சிரிப்பதும் அழுவதுமாயிருப்பாராம், அதனைக் கண்ட ஊரார் "குழந்தைக்கு மூளைக்கோளாறு ஏதேனும் உண்டாகி விட்டதோ" என்று வருந்தினர்களாம்.

அடிகளின் பள்ளிப் படிப்பைப்பற்றிப் பேசுவதெனின் தமிழை எழுதவும் படிக்கவும் கற்றுக்கொண்டார் என்று மட்டிலுமே சொல்வது சாலும். சுவாமிகளே தமது பாடல்களில் "கலைபலவும் உற்றுணர்ந்தார் வாசல், ஒருக்காலும் சென்றறியாச் சிற்றறிவேன் என்று கூறுகிறார்.

சுவாமிகள் பதினாறு வயதாயிருக்கும் போது வேளாண்மைத் தொழில் புரிந்து சிறந்த பயன் பெற்றார். பின்னர் வியாபாரம் பண்ண வாரம்பித்தார். வியாபாரிகள் கொள்ளை லாபம் வைத்துப் பொருள் ஈட்டும் தன்மையால் ஏழைகள் படும் துயரத்தை உணர்ந்தார். அவர் துன்பத்தை நீக்க ஓர் வழியும் கண்டு பிடித்தார், தூத்துக்குடி முதலான துலைவிலிருக்குமிடங்களிலிருந்து பொருள்களை மலிவாக வாங்கி அவற்றை இரெட்டியப்பட்டியிலுள்ள ஏழைகட்குக் கொள் விலைக்கே விற்கத் துணிந்தார் இதுபற்றிக் குடும்பத்தார்கட்கும் சுப்பிரமணியத்துக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு பின்னவர் மதுரைக்குச் சென்று உ. செ. இ. உருண்டை மீராராவுத்தர் அவர்கள் கடையில் கணக்கெழுதிக் காலந்தள்ளிவந்தார். சுப்பிரமணிய பிள்ளையின் பெற்றோர்க்கு வயது மூண்டு கொண்டேயிருந்தது. எனவே அவர்களது வற்புறுத்தலின் பேரில் எட்டயபுரத்தைச்சேர்ந்த மாரியம்மையார் எனும் பெண்மணியை மதுரையிலேயே அவருக்கு விவாகம் பண்ணி வைத்தார்கள்.

இல்வாழ்க்கையில் அமர்ந்திருந்த சுப்பிரமணியபிள்ளை மனம் நாளுக்கு நாள் பக்திப் பெருக்கிலேயே ஈடுபட்டுவந்தது. இவரது சமய ஒழுகலாறுகளைக் கண்டு மனமுவந்த நண்பர்கள் அனைவரும் இவரை 'சாமி' 'சாமி' என்றே அழைக்க, கணக்கப் பிள்ளை "சுவாமி" ஆகிவிட்டார். ஓர் நாள் சுவாமிகள் அதிகாலையில் வழக்கம்போல் வைகையில் நீராடி தியானத்தில் அமரும்போது தமது குருமூர்த்தியான விநாயகரைக் கண்ணாரக் கண்டு பேரின்பம் பெற்றாராம். அத்திருமேனியே அழகிய தொரு சிலா விக்கிரமாக ஏற்பட்டதாம் அதனை அடுத்திருந்த அரசமரத்தடியே சுவாமிகள் பிரதிட்டை செய்தார்.

முகமதியர் கடையில் வேலைபார்த்து வந்தபடியால் இந்துஸ்தானி மொழியையும், இஸ்லாமியக் கொள்கைகளையும் சிரமமில்லாமலே அடிகள் கற்றுக்கொண்டார். இவரது சமயப் பித்தத்தை மாற்ற கடைமுதலாளி இவரை பம்பாய்க் அனுப்பினர். அங்கும் வியாபாரம் செழித்துவளர ஆரம்பித்தது. ஆனால் கடைக்கணக்குகளை ஒழுங்கு செய்ய சுவாமிகள் மீண்டும் மதுரைக்குத் திரும்பி வர வேண்டியதாயிற்று.

பின்னர் வைகையில் அமைந்த விநாயகருக்கு ஆலயங் கட்டவும் அபிஷேகம் செய்யவும் ஆரம்பித்தார். அடியவர் குழாம்பெருகிற்று. சுவாமிகள் செல்வாக்கு எங்கும் பரவிற்று. சுவாமிகள் திருவுள்ளத்தில் தோன்றிய பக்தி வெள்ளம் அருட்பாடல்களாய் ஊற்றெடுத்தது. 'வழிகாட்டும் வான்பொருள்' எனும் நூலின் இறுதியில் சுவாமிகள் பாடிய இனிய அருட்பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சுவாமிகள் நடத்திய பல அற்புதங்கள் அடியார்க்கு நல்விருந்தளிப்பவையாகும்.

சுவாமிகள் எந்த விடத்தில் பிறந்து, விநாயக பூஜை செய்து வந்தாரோ அந்த இடத்திலேயே, துந்துபி வருஷம் மார்கழி மாதம் 20-ந் தேதி மறைந்தருளினர் என்பது வியக்கத்தக்கது. இது போன்ற இன்னும் பல விஷயங்களை இந்நூலில் பரக்கக் காணலாம்.

இந்நூலுக்கு திருவளர். ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் பி. ஏ. எல். டி. ஓர் அரிய முகவுரை எழுதியுள்ளார். விலை ரூ 1—8—0. சரித்திரம் மட்டும் (0—12—0)

பதிப்பாளர்:

திரு. ஆ. நரசிம்மலு நாயுடு,
குமரன் பிரஸ், காஞ்சீபுரம்.







# மனித நாகரிகப் பழிப்பு

## வரம்பு கடந்த தண்டனைகள்

### கவி ரவீந்திரர் சொற்பொழிவு

நான் சிறு குழந்தையாயிருந்த போது போலீஸ்காரரைக் கண்டால் அவர்கள் ஏதோ ஒரு அதி பயங்கரமான இலாக்காவைச் சேர்ந்தவர்கள் என்று கருதி வந்தது இன்னும் என் ஞாபகத்திலிருக்கிறது. அவர்கள், பேய் பிசாசுகளைப் போல் சாதாரண மனித வாழ்க்கையுடன் தொடர்பு அற்றவர்களாகத் தென்பட்டார்கள். திருடர்களையோவெனில், இதுகாரணமாக மனித வருக்கத்திற்குப் புறமானவர்கள் என்று கருதினேன். ஆனால் ஓர் நாள் ஒரு கள்வன் எங்கள் வீட்டு வேலைக்காரர்களிடம் சிக்கிக் கொள்ளாமல் தப்பி ஓடிக்கொண்டிருப்பதை என் கண்ணால் பார்க்க நேர்ந்தது. அப்போது அவன் மற்றவர்களைப் போல் ஒரு சாதாரண மனிதனே எனவும் ஆயின் அனைவரையும்விட பலஹீனமானவன் என்றும் உணர்ந்து அதிசயமடைந்தேன்.

அவ்வதிசயம் இன்னும் என்னை விட்டு மாறவில்லை: சட்டத்தை மீறி நடந்து கொண்டவர்கள்—காரணம் எதுவாயினும் சரியே— குற்றவாளி என்ற பெயர் சூட்டப்பெற்று விடுகின்றார்கள். மனிதத் தன்மைக்குப் பொருத்தமற்ற முறையில் அவர்களை நடத்துகிறோம். அதுபற்றிப் பச்சாத்தாபங் கொள்ளாமல் இன்னும் அவர்கள் காரியத்தில் ஒருதலைச் சார்பாகவே இருந்து வருகிறோம். அவர்கள் நம்மினும் வேறுபட்டிருக்கும் காரணத்தினால், சமுதாயச் சட்டமளிக்கும் அதிகாரத்துடன் அவர்களைக் கொடிய வேதனைக்குள்ளாக்கி விடுகிறோம். இவ்வாறாக மனித சமூகத்தில் ஆழ்ந்துகிடக்கும் கொடுந்தன்மையானது மனங்கொண்ட மட்டிலும் குற்றவாளிகளை சேகரித்துக் கொண்டே வருகிறது.

எனது அனுபவத்திற்கண்ட பிறிதோர் நிகழ்ச்சியை இங்கு குறிப்பிடுகிறேன். கல்கத்தாவில் மக்கள் நடமாட்ட மிகுந்த ஓர் பாதையின் ஊடே, ஏதோ குற்றஞ் செய்ததற்காக ஒரு போலீஸ்காரன் ஒருவனை அவன் மணிக்கட்டையில் கயிற்றைக்கட்டி மிருகத்தைப்போல் இழுத்துச் சென்று கொண்டிருந்தான். இஃது என் மனதில் ஆழமாய்ப் பதிந்தது. ஏனெனில் நான் இங்கிலாந்திலோ அல்லது ஐரோப்பாவின் இதர பாகங்களிலோ இத்தகைய கொடுமையான காட்சிகளைக் கண்டதில்லை. மனிதற்குரிய சீவகாருண்ய இயல்பின் மீது சுமத்தப்படும் ஒரு நிந்தையாகும் இச்செயல். குறிப்பாகப் பேசுங்கால் அஃது எனது நாட்டவர்கள் மீது சுமத்தப்பட்ட தொரு பழியெனவும் கருதுகின்றேன். அக்கொடுமையைக் கண்டதும் என்மனதிற் சினத் தீ மூண்டெழுந்தது. சட்டமீறிய ஒருவனை தம் நாட்டிற் பிறந்த காரணத்தால் வேதனைக்கு உட்படுத்துவதும் அவனை வெறுத்துத் தள்ளுதலும் கொடுஞ் செயல்களாகும். அந்நிந்தனை நம்மவர்கள் அனைவரையும் சாரும். சட்ட ரீதியான தண்டனைகளின் நிமித்தம் எதிரியை பேரவமானத்திற் காளாக்கும் வழக்கம் நமது நாட்டிலேயே பார்க்கலாம்.


கவி தாகூர்.

அநாகரிகமான மனோநிலைமையுடையவர்க்கு கொடிய தண்டனை முறைகள் பலன் தருவனவாகத் தோன்றலாம். ஆரம்பப் பாடசாலை முதல் பைத்தியக்கார ஆஸ்பத்திரி வரையிலும் உள்ள அதிகாரிகளின் மனப் பான்மையும் இவ்வாறாகவே இருக்கிறது. மனித உள்ளத்தில் பதுங்கிக் கிடக்கும் ஆதிகாலக் காட்டு மிராண்டித்தன்மை கொடுஞ் செயல்கள் புரிவதில் ஆனந்தங்கொள்கின்றன. நாகரிகம் பெற்ற தேசங்களில் இத்தகைய முறைகள் மாய்க்கப்பட்டு வருகின்றன. நாகரிக உணர்ச்சியால் மனித இயற்கை தன்னுள் அமைந்திருக்கும் மிருக சுபாவத்தை அடக்கிவருகிறது. அத்தகைய அடக்கத்தைப் பயிலாத தேசங்களில் மிருகத் தன்மை தாண்டவமாடுகிறது. தீச்செயல்கள் சட்ட பூர்வமாக ஏற்றுக்கொள்ளப் படுகின்றன. மனித சமூகத்தின் லட்சியமானது மிருகத்தனத்தின் மேலீட்டினால் தினந்தோறும் சிறைச்சாலைகளில் மீறப்பட்டு வருகிறது.

பழிக்குப் பழி வாங்கும் நோக்கத்துடன் சிறைச்சாலைகள் குற்றவாளிகட்கு இடங்கொடுக்கவில்லை எனில் அவமானத்தைக் கருதியேனும், சட்டரீதியான தண்டனைத் தாக்குகள் மறைந்து போயிருக்கும். நிலை

யின் இயல்பு என்னை எனின், அஃது சிறிது ஆதரவு பெற்றுக் கொண்டுவிட்டதாயின் சமுதாய அமைப்பில் ரகசியமாய்ப் புகுந்து அதனுடன் கலந்து கொள்வதாகும். நவீன ஐரோப்பா ஆபாசமான உதாரணங்களைக் காட்டுகின்றது. அடக்குமுறை எனும் அரக்கன் தம்மைத்தாமே நாகரிகம் மிக்க நாடுகள் என்று அழைத்துக்கொள்ளும் தேசங்களில், தனது பல்லைக் காட்டி நாகரிகச் செயல்களைப் பரிகசிப்பதேபோல் தன்னாட்சி செலுத்தி வருகின்றான். ஆனால் இப்பாதகச் செயல்களுக்குப் பிறப்பிடமாயிருப்பது சிறைச்சாலைகளே. இவ்விடங்களிலேயே ஆளும் சக்தியின் சம்மதத்துடன் கொடுஞ்செயல்கள் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. அரசியலின் பேரால் இழைக்கப்படும் காட்டுமிராண்டித் தனமாகிய சைத்தானை மனித இரத்தை ஊட்டி வளர்ப்பதற்கென நிர்மாணிக்கப்பெற்ற பெரிய கூண்டுகளைப்போல் இச்சிறைச்சாலைகள் அமைந்துள்ளன. பெருஞ்செலவில் கட்டப்பட்டிருக்கும் சிறைச்சாலைகளில் நாகரிக மக்கள் நாடோறும் இரக்கமின்மை என்ற விஷத்தை அருந்திக்கொண்டே வருகின்றனர்.

இத்தகைய தண்டனைகள் அளிக்கும் நாடுகள் தமக்கு அருகாண்மையிலிருக்கும் தேசங்களையும் கெடுத்துவிடுகின்றன. நான் சைனாவுக்கு யாத்திரை செய்துகொண்டிருக்கும்போது ஹாங்காங் வந்திறங்கினேன். ஒரு சைனா வியாபாரி கடற்கரையிலிருந்த பிரயாணிகளுக்குத் தனது சாமானை விற்றுக் கொண்டிருந்தான். இது தடுக்கப்பட்டிருக்கலாம். அச்சமயம் அங்கே தோன்றிய ஒரு சீக்கியனான கான்ஸ்டபிள்—எனது நாட்டைச் சேர்ந்தவன்—அவனது சடையைப் பற்றி இழுத்துக் காலால் உதைத்தான். இத்தகைய அநாகரிகமான சட்டங்கள் கல்வியறிவற்ற ஒருவனை முரட்டுத்தனமாய் நடந்து கொள்ளப் பெரிதும் தூண்டுகிறது. இந்த வியாபாரியின் நிலைமையில் ஐரோப்பியக் கள்வனோ அல்லது போக்கிரியோ இருப்பானாகில் அவன் எவ்வாறு நடத்தப்பட்டிருப்பான் என்று சிந்தித்தேன். ஹாங்காங்கிலிருந்த அச்சீக்கியக் கான்ஸ்டபிள் கொண்டுவிற்கும் அச்சிறு வியாபாரியைத் தடைசெய்துவிட்டான். ஆனால் அவன் ஜனசமூக முழுமையுமே உதைத்துத் தள்ளியதாக என் மனதிற் பட்டது. இவ்வித இழிவான முறைகளைப் பொறுத்துக் கொண்டிருக்கும் மக்கள் தமது நாட்டில் காட்டுமிராண்டித்தனத்தைப் பெருக்கிக்கொள்கிறார்கள்.

ஒருவனது சடையைப் பிடித்திழுத்துக் காலால் எட்டி உதைத்த சீன அரசாங்கப் பிரதிநிதியைப் போன்றவர்கள் இந்நாட்டிலும் ஏராளமாயிருக்கின்றனர். சீனாவில் அத்தகைய இழிநிலை விருத்தியாவதற்கு ஏதுவாயிருப்பவை இந்நாட்டிலும் தம் முழு ஆற்றலுடன் தலைகாட்டி வருகின்றன. இந்திய வானமெங்கும் கொடுமையும் துவேஷமும் பரவிவிட்டது.

நமது நாட்டுச் சிறைவாசிகள் சார்பாகவும் நாம் ஏதும் அதிகமாய்ச் செய்வதற்கில்லை. எது நேர்மையானது, எது நேர்மையற்றதெனச் சுட்டிக்காட்டவும் நாம் இயலாதவர்களாயிருக்கிறோம். யாரிடத்தில் சொல்வது? யாரை எதிர்ப்பது? நமக்கும் அரசாங்கத்தவர்க்குமிடையே இருப்பவரையும் சொந்த நாட்டு மக்களின் மீது சுமத்தப்படும் நிந்தையைப்பார்த்தும் சும்மாயிருந்து கொண்டே அன்னிய அரசாங்கத்திற்குத் தொண்டு புரிந்து வருபவர்களாயுமிருப்பவரையே நாம் மன்றாட வேண்டியதாகிறது.

* * *

சிறைவாசிகளிற் பலர் தமது அந்திய காலத்தில் விடுதலைபெற்று வீட்டிற்கு வரும்போது காச நோயால் மடியும் தறுவாயிலிருக்கிறார்கள். என் தேசப் பிரதிநிதிகளாகிய உங்களிடம் ஒன்று கேட்கின்றேன். விசாரணை எதுவுமின்றி அவர்களை இத்தகைய துன்பம் செறிந்த சாக்காட்டிற்கு ஆளாக்குவது நியாயமென்று நீங்கள் கருதுகிறீர்களா?

நீண்ட நாட்களாக என் மனதிற் புதையுண்டு கிடந்த ஓர் துயரத்தைப் பற்றி உங்களிடம் பேச விரும்புகிறேன். சிறிது காலத்திற்குள்ளாக இந்நாட்டில் பல கொள்ளைகளும் கொலை முயற்சிகளும் நடைபெற்றிருக்கின்றன. அந்நிகழ்ச்சிகளைக் கண்டு, அதனால் தம் பந்து மித்திரர்களுடன் இடுக்கண்களை அனுபவித்துச் சம்பவங்களின் இரகசியத்தை அறிந்திருப்பவர்களான இம்மக்களே, அனைவரும் சரியென்று நம்பும்படியான வதந்திகள் பரவுதலுக்கு பொறுப்பாளிகளாயிருக்கிறார்கள். அச்செயல்களை அரசியல் குற்றமென்று கருதாத அதிகாரிகள் சந்தேகத்தின் இறுதி எல்லைவரையிலும் விசாரணை செய்துகொள்ளாமல் சமாதானங் கூறாமலே தண்டனை விதித்துவிடுகிறார்கள். ஒரு





தலைச் சார்பான இந்த நடவடிக்கைகளை நமது பிரதிநிதிகளும் அங்கீகரித்துக் கொண்டிருக்கின்றனர். அரசியல் கொலைகட்கும், கொள்ளைகட்கும் காரணமானவர்கள் வெறுக்கத்தக்கவர்களேயாவர். இழிதகைமையான செயல்களைப் புரியும் எதிர்க் கட்சியினரும் குறைவாய் வெறுக்கத்தக்கவர்களன்று.

ஒரு கட்சியினரை விட்டுவிட்டு இதர கட்சியினரைப் பற்றி மட்டிலும் அந்தரங்க விசாரணையின் மூலம் உளவறிந்து கொள்ளலாம் என்ற வாதம் புதுமையாகவே தோன்றுகிறது. இருபுறத்தவர்களுக்கும் தண்டனை விதிக்க வேண்டியதவசியம். சதியாலோசனை, ரகசியக் குற்றங்கள் ஆகியவற்றிற்குச் சட்ட ரீதியான சாட்சியங்கள் கிடைத்தல் அரிது. ஆனால் குற்றங்களின் பெருக்கத்தையும் அவற்றின் அதிபாதகத் தன்மையையுங் கருதுங்கால், இருசாராரும் ஒரே தன்மைத்தான நிலைமையில் இருப்பதாகவே சொல்லவேண்டும். வரம்புமீறிய தண்டனைகளை நான் காட்டுமிராண்டித்தனமென்றே சொல்வேன். தீவிரமான எதிர்ப்பு முறைகளால் இருபுறத்தவர்க்கும் சமமாக தண்டனைகள் அளிக்கப்பட்டு வரவேண்டும். சர்க்காராயினும், சமுதாயமாயினும் குற்றங் கண்டிக்க நேர்ந்தால் நீதிபதியாகவே நடந்துகொள்ள வேண்டும். தண்டனை அளிப்பதாயின் இரு தரப்பினர் விஷயத்திலும் தனிக்காவல் தண்டனையோ, அந்தமானுக்கு தேசப்பிரஷ்டம் செய்யப்படுவதோ கூடாதென்பதே எனது விருப்பம். உயர்ந்த ஆசனங்களில் அமர்ந்திருக்கும் நமது பிரதிநிதிகள் அவ்வாறு செய்வார்களெனில் கீழே நிற்கும் நான் அவர்கள் செயலை மறக்கத்தான் வேண்டும்.

(இஃது அந்தமான் தினத்தன்று கவியரசர் சாந்தி நிகேதனத்தில் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம்)

# 'வந்தேமாதரம்'

## — விபின் சந்திரபாலர் விரிவுரை —

'வந்தேமாதரம்' ஒரு மந்திரமாகும். மந்திரம் என்பது ஓர் தனி ஓசையன்று; அஃது ஓர் சக்தி. ஒரு வார்த்தையன்று; ஆயின் அஃது உயிர்ப்பு ஊட்டுஞ்சக்தி. மனோ எழுச்சிதரும் அருள் வாக்கு, சத்யம், எனவும் அதைக்கூறலாம்.

வேதங்களிலும் இதிகாசங்களிலும் மந்திரங்கட்கு, இத்தகைய தொன்மையும் உயர்வும் வாய்ந்த பொருள்தான் அளிக்கப்பட்டிருக்கிறது. அது தெய்வீகச் சக்தி பெற்று நித்தியமாய் என்றும் நிலைபெற்று வரும் கருத்தாகும். அதற்குக் கருத்தாக்கள் ஒருவரும் இல்லை. மகரிஷிகள் தீர்க்கதரிசிகளே யாவர்.

வந்தேமாதரம் ஓர் மந்திரம். ஒவ்வொரு மந்திரமும் தன் மூலமாய் வழிபடற்குரிய ஓர் தெய்வீகக் கருத்தினை உருவகப்படுத்திக் கட்டுகின்றது. அத்தகைய ரூபகத்தின் இயல்பு தெய்வத்துவத்தின் சின்னம் அல்லது அறிகுறியாகத் திகழ்கிறது. 'வந்தேமாதரமும்' ஓர் தெய்வத்தையே குறிப்பிடுகிறது. அத்தெய்வம் நம் தாய்நாடாகிய பாரதமேயாம்.

மந்திரத்தின் சக்தி மந்திரத்துக்குள்ளில்லை என்பதை உணரவேண்டும். அதில் நாயகமாய் விளங்கும் தெய்வீக வடிவின் சக்தியிலும் கருத்திலும், உலகிலுமே, அது அமைந்திருக்கிறது. இதேபோல் வந்தேமாதர மந்திரத்தின் சக்தியும் அதற்குள்ளில்லை; பேராற்றல் வாய்ந்த மக்கள் உள்ளங்களை யெல்லாம் எழுப்பிய அம்மகா மந்திரத்தின் சக்தி, வார்த்தையிலுள்ளதன்று. தன் மூலமாக உருவகப்படுத்திக் காட்டப்பெறும் தெய்வீக வடிவின் சக்தியே அவ்வாறு செய்தது (செய்கிறது) எனல் வேண்டும். அச்சக்தி ஆண்டவனால் உலகம் உண்டான நாள் தொட்டுத் தனது சிறந்த லட்சியத்தை நிறைவேற்றுதற்கென படைக்கப்பட்டது. அஃது மனித சமூகத்தில் இயல்பாகவே அடங்கிக் கிடக்கின்றது.

நாம் காணும் ஒவ்வொரு பொருளும் கடவுளின் அம்சமேயாகும். ஒவ்வொரு மனிதனும் பரமாத்மாவின் அம்சமே யாகிறான்.

ஒவ்வொரு சமூகமும் தெய்வீக லட்சியத்தின் அருள்விளக்கமாகும். ஜனசமூகம் என்பது தனி மனிதர்களின் சேர்க்கையாலான ஒரு கூட்டம் அன்று. ஓரே பொதுவான நோக்கத்துடன், பொதுவான லட்சியத்திற் கிளர்ச்சி செய்பவர்களென்றாலுங்கூட அவர்கள் ஜனசமூகத்தினர் ஆகிவிட மாட்டார்கள். ஒரு கப்பலுக்குச் சொந்தமான கம்பெனிக்காரர்கள் ஒரு ஜனசமூகம் ஆகிவிடமாட்டார்கள். மதுவிலக்குச் சங்கத்தினரின் ஓர் சங்கம் ஒரு ஜனசமூகமாகிவிடாது. ஓர் சங்கமோ அன்றிக் கம்பெனியோ உடைந்து போகுமாயின்

அதில் அங்கம் பெற்றத் தனி மனிதர் களை எவ்வித தீமையும் பாதிக்கப் போவதில்லை. ஆனால் ஓர் ஜனசமூகம் அழிவதெனின் விளையும் பயன் அது வன்று. ஒரு ஜனசமூகத்திலிருக்கும் மக்கள் அனைவரும் அதன் பலதிறப் பட்ட உறுப்பினர்கள் ஆவர். எல்லா உறுப்புகளும் சேர்ந்து அங்க அமைப் பின் உயிர் வாழ்க்கைக்காகப் பணி புரிகின்றனவல்லவா! அமைப்பைச் சிதைத்துவிட்டீர்களாயின் உறுப்பு களுக்கு இங்கே என்ன வேலை? அவை களும் செயலற்றுப் போகின்றன. உறுப்புகளின் சக்தியை அழித்துவிட் டாலோ அங்க அமைப்பு தன் வேலை யைச் செய்வதற்கு இயலாதபடுத்து விடுகின்றது. உறுப்புகளைவிட அங்க அமைப்பே முதன்மைபெற்றது. உறுப்புகள் வளர்ச்சி பெறுகின்றன! மாறுதல் அடைகின்றன; ஆயின் அமைப்போ என்றும் மாறுதலடை யாமல் ஒரே தன்மைத்தாகவே யிருக்கின்றது. தனி மனிதர்கள் இறக்கிறார்கள் பிறக்கிறார்கள்—ஆனால் ஜனசமூகம் மாறாமலே என்றும் நிலைபெற்று வாழ்கிறது.

வந்தேமாதரம் தந்த சக்தி சரித் திர காலத்திற்கும் முற்பட்டது. இச்சக்தி குறிப்பாக நம் ஜனசமூகத் தவர்க்கே அளிக்கப்பட்ட தென்று சொல்லாம். ஒவ்வொரு ஜன சமூகத் திற்கும் அதற்குரிய சிறப்பியல்புகள் அமைந்திருக்கின்றன. தனி மனிதன் ஒவ்வொருவனிடமும் தனி இயல்பு வாய்ந்த மனோ நிலைமையும், பண்பும் அமைந்திருப்பது போலவே ஜன சமூகங்களின் இயல்புகளும் ஒன்றுக் கொன்று மாறுபட்டனவாகக் காணப் படுகின்றன. ஆரியர்—மங்கோலி யர்; வெள்ளையர்—கறுத்தவர்; என்னும் வேறுபாடுகளைக் கண்டு கொள்க. இந்துக்களைப்போன்ற சில சமூகத்தினரின் சரித்திரத்தில் ஆன் மீக உணர்ச்சி உயிர் வாழ்ந்து வரு வதைக்காணலாம். சிலர் லோகாயித லட்சியங்களின் சார்பில் தமது நாக ரிகத்தைப் பேணி வளர்த்து வந்திருக் கின்றனர். பல்வகையான ஜனசமூ கங்களின், பாஷைகள், இலக்கியங் கள், தத்துவ ஆராய்ச்சிகள், சம யங்கள் முதலானவற்றில் நாம் காணும் வேறுபாடுகள் தனிக் குணங் கள் ஆகியவெல்லாம், சரித்திர காலத் திற்கு முன்னிருந்தே அவ்வச்சமூகங் களில் அமைந்திருக்கும் சிறப்பியல்பு களாகும். தனியொருவனது பண் பைச் சிதைத்தல் அவனது லட்சியத் தைப் பெறவிடாமல் தடுப்பதாகும். எனவே ஒரு ஜனசமூகத்தவரின் தேசி யத்தை அழித்தல், அச்சமூகத்தின் சரித்திர பூர்வமான இயல்பின் சிறப் பையே அழித்தலாகும்.

சமயத்தின் உள் நோக்கம் தன்னை யுணர்தலே யாகும். நமது தேசியத் தின் பரிபூரணத்துவமான நிலமை யின் வாயிலாக தெய்வத்வம் பெறு தலே தன்னை யுணர்தலாகும். தனிமனிதனுக்குரிய சமயம் அவனது தனிக்குணத்தை விருத்தி செய்கின் றது. தேசியச் சமயம் ஜன சமு கத்தை விருத்தி செய்கின்றது.

வந்தேமாதர மந்திரத்தால் எழுந்த இப்புது தேசியம், அரசியல், பொரு ளாதார சம்பந்தமற்ற ஓர் தேசியம் மட்டிலும் அல்ல. அஃது ஓர் மதம். இப்புதிய தேசியத்தில் அரசியல், பொருளாதார, பிரஜா உரிமை சம் பந்தமான எல்லா லட்சியங்களும் இடம் பெற்றிருக்கின்றன. சமயம் உயிர் வாழ்க்கையின் ஓர் பகுதி யன்று. அது முழுவாழ்க்கையையும் பற்றியதே யாகும். பொருளாதாரம் வாழ்க்கையைப் பொருள் சம்பந்தப் பட்டது வரையிலும் கவனிக்கிறது. அரசியல், ராஜாங்கத் தொடர்பைப் பற்றியது வரையிலும் வாழ்க்கை யைப்பற்றி ஆராய்கிறது. ஆனால் சம யமோ வாழ்வை முழுமையாகவே ஆராய்ந்து வருகிறது. அதுபோலவே தேசியமும் சமூகத்தை விழிப்படை யச் செய்து அதன் அரசியல் பொரு ளாதாரம், கலை ஆகிய வளர்ச் சிக்குரிய துறைகளை விருத்தி செய்து மனித சமூகத்தின் சர்வலோக சகோ தரத்துவத்திற்குரிய நன்மைக்கு ஆக்கமளித்து வருகிறது. (6-7-1906)

## நன்றி யறிவிப்பு

ஈஸ்வர யாண்டு ஐப்பசித் திங்கள் முதல்நாள் எனது சகோதரர் திரு வாளர் சாண்டோ K. A. சோம சுந்தரன் அவர்கட்கு வேந்தன்பட்டி யில் நடைபெற்ற திருமணத்தைக் குறித்து, கம்பிச்செய்தி, கடிதச் செய்திவாயிலாக, வாழ்த்துக்களனுப் பிய பொதுநிலையங்கள், சங்கங்கள், உடற்பயிற்சி சாலைகள், அன்பர்கள் அனைவருக்கும் மணத்தம்பதிகள் சார் பாகவும் உளம்நிறைந்த வந்தனத் தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தங்களன்பை மறவாத கா. அ. இராம நாதன், வலம்புரி.







# இந்தியாவுக்குச் சீனர் செய்தி

சர்வதேச சங்கக் கௌன்ஸில், அசம்பளி ஆகியவற்றின் சீனப் பிரதி நிதியும், பிரான்ஸுக்கு அனுப்பப் பட்ட தூதரமான, டாக்டர் வி. கே. வெலிங்டன்கூ எனும் பெரியார்,

## இந்தியாவுக்கு விடுத்த செய்தி

ஆசியாக் கண்டத்திலுள்ள தேசங் களில் சமாதான விருப்பமுடைய இரு பெரிய தேசங்கள் இந்தியாவும் சீனாவுமே யாகும். உயிர் வாழ்க்கைக் கும் சாக்காட்டுக்கு மிடையே போராட்டம் செய்து கொண்டிருக்கு மிச்சமயத்தில் இந்தியாவும் அதன் மக்களும், செழிப்பும் சமாதானமும் பெற்று வாழவேண்டு மென்று நாங் கள் பிரார்த்திக்கின்றோம்.

1931 முதல் சீனாவுக்குள் ஜப்பானி யர்கள் இழைத்துவரும் அட்டூழியங் களும், அவரது படையெடுப்புகளும் எல்லை கடந்துவிட்டன. கடல், தரை, ஆகாயமெனும் மூவழிகள் வாயிலாகவும் அவர்கள் சீனாவுக்குள் புகுந்து விட்டனர். வடசீனாவிலும், ஷாங்கைப் போர்முனைகளிலுமுள்ள நிரபராதிகளான நகர மக்கள் ஆயி ரக் கணக்கில் அவதிப்பட்டுவரு வது சொல்லுந்தரமன்று. கழிந்த சில வாரங்களாய், ராணுவத் தொடர்பற்ற ஆடவர் பெண்டிர், குழந்தைகள் ஆகிய நகரவாசிகள் அனைவரையும் வேறுபாடின்றிக் குண்டுகளெறிந்து மாய்த்துக் குவித்து வருகின்றனர். மனிதத் தன்மைக்குப் புறமான இப்போர் முறைகள் மக்கட் சமூகத்தின் மனோ சாட்சி யைப் பிடித்தசைத்து, விட்டதுடன் நாகரிக உலக முழுதுமே அவ்விழி தகைமையான வழிகளைத் தற்போது கண்டித்து வருகின்றது. இத்தகைய துன்பஞ் செறிந்த நிலைமையிலும், சீனமக்கள் தமது மன உறுதியினின் றும் பிறழ்துவிடவில்லை. தனி ஒரு மனிதன் பிழைத்திருக்கு மட்டிலும் அவர்கள் தமது நாட்டைக் காப்பாற் றப் போராடத்தான் போகிறார்கள். உண்மை பேசுவதாயின், ஜப்பானி யரின் சீனப் படையெடுப்பு சீன மக்கட் சமூகத்தை இதற்கு முன் ஒருபோதுங் காணாதவாறு ஒன்றுபடுத்தியிருக்கிற தென்றே சொல்லலாம். இன்றைய ஜப்பா னின் படையெடுப்பை எதிர்ப்பதற்கு 47,50,00,000 மக்கள் சீன மத்திய சர்க்காருக்குத் துணைபுரிய முன் வந் திருக்கின்றனர்.

இந்திய மக்கள் சீனரின் நிலை மையை உணர்ந்து அனுதாபப்படு வது மட்டுமின்றி, மாபெருஞ் ஜன நாயகங்களாகிய கிரேட் பிரட்டன், அமெரிக்க ஐக்கிய மாகாணங்கள் ஆஸ்திரேலியா போன்ற பெரிய தேசங்கள் இயல்பாகவே தம்மை ஆதரித்து வருவதுபோலவே தமக் குத் துணைபுரிவார்கள் என்றும் சீனா நம்பிக்கை கொண்டிருக்கிறது.

(5-ம் பக்கம் தொடர்ச்சி)

கேள்விகட்குப் பதிலளித்து வந்திருக்கிறார்" என திரு. சத்யமூர்த்தி கூறுவது மிகையன்று.

இவரது காலத்திலே தான் கார்பொரேஷன் மாளிகையில் தேசீயக் கொடி முதன் முதலாக ஏற்றப்பட்டது. காங்கிரஸ் மந்திரிகளை முதன் முதலாக வரவேற்கும் பெருமையும் இவரே யடைந்தார். ஆனால் இவரது நிர்வாகக் காலத்தில் ஏற்பட்ட சில துர்சம்பவங்கள்,

## கிணறு வெட்டப் பூதம் கிளம்பியது போல்

காங்கிரஸ் அங்கத்தினர் பெருமைக்கு ஊறு செய்வதாயிற்று. கார்பொரேஷன் ஊழல்களைப்பற்றி விசாரணை செய்த கமிட்டியின் யாதாஸ்தை மாகாணக் காங்கிரஸ் காரியக் கமிட்டியார் பரிசீலனை செய்து கமிட்டியின் சிபார்சுகளை ஒரு மனதாக ஒப்புக்கொண்டு விட்டனர். கா. கட்சியின் ஊழல்கள் எடுத்துக் காட்டப்பட்டன. கீழ்வரும் ஆறு காங்கிரஸ் அங்கத்தினர்களின் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது :—திருவாளர்கள், (1) பி. கோபால ரத்தினம் (2) விநாயக முதலியார், (3) தாமோதர நாயுடு, (4) பாலசுப்ரமணியம், (5) ஆதிகேசவலு நாயக்கர், (6) லட்சுமணசாமி முதலியார்.

## சென்னை ஹரிஜன் மேயர்

நவம்பர் 9-ந் தேதி திரு. ஸ்ரீராமுலு நாயுடுவின் தலைமையில் நடைபெற்ற சென்னைக் கார்ப்பொரேஷன் கூட்டத்தில் திரு. ஜே. சிவசண்முகம் மேயராகவும் திரு. யு. கிருஷ்ணராவ் டிபுடி மேயராகவும் ஏகமனதாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஹரிஜன் வகுப்பைச் சேர்ந்தவரில் இவர் தான் முதன் முதலாக காங்கிரஸின் சார்பில் மேயர் பதவி ஏற்றுக்கொள்கிறார்.

திரு. சிவசண்முகம் 150 சேரிகளின் பிரதிநிதியாகிறார். தமது பணிவான குணங்களாலும் ஆடம்பரமற்ற சீலத்தாலும் கார்ப்பொரேஷன் அங்கத்தினர் அனைவரது நன்மதிப்பையும் பெற்றிருக்கிறார். இவருக்கு இன்னும் விவாகமாகவில்லை. இவரது தேர்தலைப்பற்றிய அறிவு கிடைக்கப் பெற்றதும் மகாத்மா இவரை இதய பூர்வமாய் வாழ்த்துவார் என்பதற்கு ஐயமுண்டோ! திரு. சிவசண்முகத்தின் நிர்வாகமும் இவர்க்கு முந்தியவரின் நிர்வாகத்தைப்போலவே மணம் பெற்று இலங்கவேண்டுமென விழைகின்றோம்.

## திரு. நரிமன் ராஜினாமா

திரு. கே. எப். நாரிமன் எழுப்பிய புகார்பற்றி மகாத்மாவும், பகதூர்ஜீயும் அனுப்பிய யாதாஸ்து காரியக் கமிட்டியில் ஆலோசிக்கப்பட்டது. காந்திஜீ அனுப்பியிருந்த மேல் கடிதமும் விசாரணை யாதாஸ்து பற்றி திரு. நரிமான் அனுப்பியிருந்த அறிக்கைகளும் கமிட்டியில் ஆலோசிக்கப்பட்டன. யாதாஸ்தில் கூறப்பட்ட முடிவை திரு. நரிமன் அங்கீகரித்தார். பின்னர் அதிலிருந்து பின்வாங்கியதை உத்தேசித்து காங்கிரஸ் ஸ்தாபனத்தில் நம்பிக்கையும் பொறுப்பும் வாய்ந்த பதவிக்கு அவர் தகுதியானவரல்ல என்று காரியக் கமிட்டி அபிப்பிராயப்பட்டது. இது காரணமாய் திரு. நாரிமன் பம்பாய் மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பதவியை ராஜிநாமா செய்துவிட்டார்.

---

# முதுமையிலும் இளமை

## பி. ஸி. ரே—காந்திஜீ தமாஷ்

வார்தாவில் நடைபெற்றக் கல்வி மகாநாட்டிற்கு விஜயஞ்செய்திருந்த பெரியார்களிற் பிரபல சந்திர ரேயும் ஒருவர். நரைத்துப்போன தலையும் இளைத்த யாக்கையும், உடையவர். இத்தகைய பருவத்திலும் தளராது உழைத்துவருகிறார். தமது தூய்மையான உள்ளமும், எளிய வாழ்க்கையும் ஒரு புறமிருக்க, சிறு குழந்தைகளைப்போல் குறும்பு பேசிக் கொண்டே மகிழ்கிறார். ஆச்சார்யா ரே தமது சகாக்களை கண்டதும், 'தங்கட்கு வயது என்ன ஆகிறது' என்று கேட்பார். எவரேனும், 'எனக்கு 45 ஆகிறது" என்று சொன்னால், "இவ்வளவுதானா! என் முன் நீங்கள் எல்லோரும் சிறு குழந்தைகளே! எனக்கு 77 ஆகிறது. நான் காந்திஜீயைவிட எட்டு வயதிற்குப் பெரியவன். கவி டாக்கூரைவிட மூன்று மாதங்கட்கு இளையவன். சர் ஜே. ஸி. போஸ் என்னிலும் மூன்று வயதுக்கு மூத்தவர் என்று சொல்லி நகையாடுவார்.

அதியற்புதமான ஞாபக சக்தி வாய்ந்தவர் பி. ஸி. ரே. அவருடன் பேசிக்கொண்டிருக்கும் சிறிது நேரத்துக்குள் தமது வாணாளில் நடைபெற்றப் பலவித நிகழ்ச்சிகளை பொழிந்துவிடுவார்.

"தினம் தினம் யௌவனமடைந்து கொண்டே வருகிறீர்கள் அல்லவா!" என்று காந்திஜீ அவரைக் கேட்டார். அதற்கு திரு ரே, "ஆம், சரிதான். ஆனால் கண்கள் தான் ஒளியிழந்து கொண்டே வருகின்றன" என்று சொல்லி நகைத்தார்.

'லைட்கிளப்' பைப்பற்றி என்ன சொல்கிறீர்கள் என்று வேறொருவர் கேட்டார். அப்போது, "அதோ அந்த மைதானத்தி லிருக்கிறதே அதைப் பற்றியா கேட்கிறீர்கள்?" என்று பகர்ந்து கொண்டே, "சரி அது மாலையில் 7-30 மணிக்கன்றே நடைபெறும். எல்லாக் காலங்களிலும் அங்கே பொழுது போக்குதான். கொடுமழை யென்றும் குளிர் கா... றைன்றுங் கிடையா" என்றார்.

---

## 'பாட்லிவாலா குற்றவாளியல்ல'

தோழர் பாட்லிவாலா வழக்கி... அஸெஸர்கள் ஒரே அபிப்பிராயத்... டன் எதிரி ராஜத்துவேஷக் குற்... செய்யவில்லை என்று முடிவு கூறின... செஷன்ஸ் ஜட்ஜ் 12-ந் தேதி தீர்... கூறுவாராம்.

# Thai Ethal-
# Oolian Annual
# Special Number

# ஊழியன்
# "தை இதழ்"

தை மாதம் முதல் தேதி
வெளிவரும்.

தமிழ் நாட்டின் பேரறிஞர், தேச பக்தர், தியாகிகள், நாவலர்கள், பாவலர்கள், இயற்கை நூல் புலவர், உடல் நூல் வல்லார் ஆகிய பலரின் அருங் கட்டுரைகளும், உள்ளத்தைக் கவரும் பாக்களும், கண்களைப் பறிக்கும் ஓவியங்களுங் கொண்டு விளங்கும் ஓர் அரிய இதழ். "ஊழியன்" அளவில் பல பக்கங்கள் கொண்டது. உயர்ந்த காகிதத்தில் அச்சடிக்கப் பெறும்.

**வியாபாரிகள்**
**விளம்பரம் செய்வதற்கு**
**இது தக்க தருணம்**

**Apply to:—**

மானேஜர்:

## "ஊழியன்" ஆபீஸ், சென்னை.

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

